# அகத்தீசர் கலம்பகம்

# Akattīcar Kalampakam

*General Editor*

**G. JOHN SAMUEL**

*Editor*

**R. JAYALAKSHMI**

*English Rendering*

**Dr. R. RAJARATHINAM**




**INSTITUTE OF ASIAN STUDIES**

**Chemmancherry, Chennai - 600 119**

**INDIA**

**Silver Jubilee Celebration Series - 5**

**அகத்தீசர் கலம்பகம்**

**Akattīcar Kalampakam**

First Edition 2006, pp. 243

Publication No. 97

ISBN 81-87892 - 26 - 9



Price Rs. 200 US $ 20

Published with the financial assistance
from the **UNESCO** under the
**Memory of the World** project

**Copies can be had from**

Publications Division,
Institute of Asian Studies,
Chemmancherry,
Chennai - 600 119.
India.
Phone: (Off.) 24501851, 24500831, 24502212
(Res.) 24964831
Fax : 91-44-24964831
E-mail: ias@xlweb.com
World Wide Web site : http : // xlweb.com/heritage/asian

*Composed by*
**Institute of Asian Studies, Chennai - 600 119.**

# Contents

# A System of Transliteration of Tamil

## VOWELS

| Short | | Long | | Dipthong | |
|---|---|---|---|---|---|
| அ | a | ஆ | ā | ஐ | ai |
| இ | i | ஈ | ī | ஔ | au |
| உ | u | ஊ | ū | | |
| எ | e | ஏ | ē | ĀYTAM | |
| ஒ | o | ஓ | ō | ஃ | ḵ |

## CONSONANTS

| Hard | | Soft | | Medial | |
|---|---|---|---|---|---|
| க் | k | ங் | ṅ | ய் | y |
| ச் | c | ஞ் | ñ | ர் | r |
| ட் | ṭ | ண் | ṇ | ல் | l |
| த் | t | ந் | n | வ் | v |
| ப் | p | ம் | m | ழ் | ḻ |
| ற் | ṟ | ன் | ṉ | ள் | ḷ |
| ஸ் | s | ஷ் | ṣ | ஹ் | h |
| | | ஜ் | j | | |

## பதிப்புரை

இலக்கிய, இலக்கணப் பண்பாட்டுக் கருவூலங்களை மிகுதியாகப் பெற்ற செம்மொழிகளுள் ஒன்று தமிழ்மொழி. இயற்கையின் சீற்றத்தாலும், மக்களின் அறியாமையாலும், அனலுக்கும், புனலுக்கும், சிதலுக்கும் இரையாகிக் கொண்டிருக்கும் பண்பாட்டுக் கருவூலங்களைக் காக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்களுள் ஒன்று ஆசியவியல் நிறுவனம். அச்சில் வாராது ஓலைச்சுவடியிலும், தாள் சுவடியிலும் மறைந்து கிடந்த பல நூல்களை உலகறியச் செய்துள்ளது இந்நிறுவனம். தமிழ் நாட்டை விட்டு விலகி ஜப்பானின் எங்கோ ஒரு மூலையில் முடங்கிக் கிடந்த **வர்ம சூத்திரம்** என்னும் சுவடியை அச்சிட்டு வெளியிட்டமை நிறுவனத்தின் பெருமைக்கு ஒரு சான்றாகும்.

வெங்கலராசன் கதை, அண்ணன்மார் கதை, பெருமாள் சுவாமி கதை, பெண்ணரசியார் கதை போன்ற கதைப்பாடல் நூல்களும், சகுந்தலை நாடகம், திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம் போன்ற நாடக நூல்களும், நீலியட்ச கானம். தேளூர்ந்த சோழன் யட்ச கானம், சாரங்கதரன் யட்ச கானம் போன்ற யட்ச கானநூல்களும், உத்தண்டன் கோவை, திருக்கலம்பகம் போன்ற சிற்றிலக்கிய நூல்களும், கணித நூல்களும் இந்நிறுவனத்தின் வழி வெளிவந்து பெருமை பெற்றுள்ளன.

இவ்வரிசையில் முப்பத்து ஒன்றாவது நூலாக வெளிவருவது அகத்தீசர் கலம்பகம் என்னும் இச்சிற்றிலக்கியம். இது அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் ஆர். 7611 எண் இடப்பட்ட சுவடியிலிருந்து முதன் முதலாகப் பதிப்பிக்கப்படுகிறது.

### சுவடி பற்றிய செய்திகள்

இதன் ஆசிரியர் அகத்தியான் பள்ளியைச் சேர்ந்த கவிச்சக்கரவர்த்தி இராம வைத்தியநாத சர்மா என்பவர். இவர் ஐம்பத்தாறு ஆண்டுகளுக்கு முன் இந்நூலை எழுதியுள்ளார். 101 பாடல்களை எழுதியுள்ளார். ஆசிரியர் தாமே எழுதியதால் இது மூலச்சுவடியாகிறது. 1961–62ல் திருவல்லிக்கேணி பிள்ளையார் கோயில் தெரு ஆறாம் எண் இல்லத்தில் வாழ்ந்த ஆசிரியரின் இளைய சகோதரர் ஹரிஹர சர்மா என்பவர் இச் சுவடியையும் இதே ஆசிரியரால் எழுதப்பட்ட தேவிபாகவதம் 11 ஸ்கந்தங்களையும் (ஆர்.எண்.7602–7610) கீழ்த்திசைச் சுவடி நூலகத்துக்குக் கொடுத்துள்ளார்.

## எழுத்தமைதி

இந்நூலாசிரியர் பெரும்புலவர் என்பதற்கு அகத்தீசர் கலம்பகமே சான்று. வடமொழி தேவி பாகவதத்தை இவர் 12000 பாடல்களுக்கு மேல் தமிழில் பாடிக் கவிச்சக்ரவர்த்தியாகவும் விளங்கியதால் பாடல்களைத் தலைப்புடன், சீர் அடி பிரித்துத் தெளிவான கையெழுத்தில் எழுதியுள்ளார். இலக்கியச் சுவடிகள் பெரும்பாலும் புலவர்களால் எழுதப்படுவதால் எழுத்துப் பிழை, சொற்பிழை, பேச்சு வழக்குச் சொற்கள் இல்லாமல் காணப்படுகின்றன. அவ்வகையில் இந்நூலும் எந்தப் பிழையுமின்றிக் காணப்படுகிறது.

## பதிப்பு நோக்கமும் வரலாறும்

சிற்றிலக்கியங்கள் அருகி வரும் காலம் இது. எனவே இருக்கும் ஒன்றிரண்டையாவது அழியாது காக்க நூல் வடிவமாக்க வேண்டியுள்ளது. இதனை நூலாக்கித் தமிழன்னைக்கு மேலும் ஓர் அணிகலன் பூட்ட வேண்டும் என்னும் அவாவினால் இச்சுவடி பதிப்புக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

1985ஆம் ஆண்டிலேயே இந்நூலைப் பதிப்பிக்க வேண்டும் என்ற அவா எனக்கு இருந்தது. ஆனால் அப்போது வேறு வேறு துறைகளில், வேறு வேறு முயற்சியில் ஈடுபட்டிருந்தமையால் இயலவில்லை. ஆயினும் 15 ஆண்டுகள் கழிந்த பின்னரும் இதனைப் பதிப்பிக்கும் வாய்ப்பு எனக்கே கிடைத்தமை தெய்வச் செயல் என்று தான் சொல்ல வேண்டும். இதன் பெயரைக் கண்ட பலரும் அகத்தியரின் ஏதோ ஒரு மருத்துவ நூல் என்றெண்ணி விட்டு விட்டனர். இதனாலேயே இவ்வாய்ப்பு என்னை விட்டுப் போகவில்லை.

தற்போது வெளிவராத சுவடிகளைப் பதிப்பிக்க யுனெஸ்கோ நிறுவனம் உதவி செய்வதால் இந்நூல் எடுத்துப் பதிப்பிக்கப்படுகிறது.

## பதிப்புமுறை

வழக்கம்போல் பாடல், பாடலின் கீழே பொழிப்புரை, அருஞ்சொற்பொருள் அதன் கீழ் ஆங்கில மொழி பெயர்ப்பு ஆகியவற்றுடன் நூல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பதிப்புரையும், ஆய்வுரையும் நூலுக்கு முன்னர் அளிக்கப்பட்டுள்ளன. ஆய்வுரையில் கலம்பகம் பற்றிய ஆய்வும், அகத்தியான் பள்ளி, வேதாரண்யம் ஆகிய ஊர்கள் பற்றிய ஆய்வும், கோயில் பற்றிய ஆய்வும், பிற கலம்பகங்களோடு ஒப்பீட்டாய்வும்

இடம்பெற்றுள்ளன. பின்னிணைப்பில் பாட்டுமுதற்குறிப்பு, சொல்லடைவு, ஆசிரியரின் பிறநூல்கள், கலம்பகப்பட்டியல், ஆசிரியரின் வம்சாவளி ஆகியவை இடம்பெற்றுள்ளன. தேவையான இடங்களில் நிழற்படங்கள் இணைக்கப்பட்டுள்ளன.

**நன்றியுரை**

இந்நூலைப் பதிப்பிக்க உதவும் யுனெஸ்கோவுக்கு எனது முதல் நன்றி. இப்பணியில் என்னை ஈடுபடுத்திய இயக்குநர் அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது. சுவடிப்புலத்தில் உள்ளவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நூலைப் பதிப்பிக்க வேண்டும் என்ற நியதியை ஏற்படுத்தி எனக்கு நூலெழுத வாய்ப்பளித்த துறைத்தலைவர் முனைவர் பூ. சுப்பிரமணியம் ஐயா அவர்களுக்கு என்னுடைய முழுநன்றியும் உரியது.

அடுத்து இக்கையெழுத்துப் பிரதியைச் சுவடி நூலகத்துக்கு அளித்த ஹரிஹர சர்மா எனது முழுநன்றிக்கும் உரியவர். இவர் தற்போது புகழ்பெற்ற கடவித்வானாக விளங்கும் டி.எச். விநாயகராம் அவர்களின் தந்தை என்பது பெருமைக்குரிய செய்தி. ஆசிரியர் பற்றிய செய்தி அறிவதற்காக நான் திருவல்லிக்கேணி பிள்ளையார் கோயில் வீதியை வலம் வந்த போது, இவர் மகன் விநாயகராம் என்பதும், அவர் இருப்பிடமும் தெரியவந்தது தெய்வச் செயல்தான். ஏனெனில் 1961ல் ஆறாம் எண் எது என்பதை யாரே இப்போது அறிய முடியும்? பெயரைச் சொல்லிப் பலரிடம் வினவிய போது தான் வேறு முகவரி கிடைத்தது. தற்போது இவர்கள் பெரிய தெரு 20ஆம் எண் வீட்டில் உள்ளனர். நான் சென்று வைத்யநாத சர்மா என்ற பெயரைச் சொன்னதுமே திரு.விநாயகராம் அவர்கள் மிகவும் மகிழ்ந்து என்னைப் பெரிதும் உபசரித்து ஆசிரியர் எழுதிய பிறபாடல்கள், ஆசிரியரின் வரலாறு, பரம்பரை விளக்கம் என அனைத்துச் செய்திகளையும் உதவினார். பெரிய இசை வல்லுநரான அவருக்கு நேரம் கிடைப்பதே அரிது. இந்நிலையில் அவரைப் பார்க்கவும் முடிந்து அவர் செய்திகளையும் உதவினார் என்பதும் தெய்வச் செயலென்றே கருதுகிறேன். அன்னாருக்கு எனது மனம் நிறைந்த நன்றி.

அகத்தீசர் கலம்பகத்தைப் படியெடுக்க ஒப்புதல் அளித்த, கீழ்த்திசைச் சுவடி நூலகக் காப்பாளர் முனைவர். எஸ். சௌந்தரபாண்டியன் அவர்களுக்கும், படியெடுத்து உதவியதோடு மேலும் பல உதவிகளும் செய்த எங்கள் துறையைச் சார்ந்த திரு. ஒய். அந்தோனிசாமி அவர்களுக்கும் என் நன்றி.

வேதாரண்யம் சர்தார் வேதரத்தினம் பிள்ளையின் பெயரர் திரு. வேதரத்தினம் பிள்ளையவர்கள் கள ஆய்வின் போது உணவளித்து, நேரில் பல இடங்களையும் காட்டி, நிழற்படம் உதவி, நூலும் அளித்தார்கள். அவர்களுக்கு என் நன்றி பெரிதும் உரியது.

அகத்தியான் பள்ளி கல்வெட்டுகளைக் கொடுத்து உதவிய என்னுடைய பேராசிரியர் முனைவர் சு. ராஜகோபால் (கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் துறை) அவர்களுக்கு என் சிறப்பு நன்றி.

வரைபடம் கொடுத்து உதவிய நாதன் ஜெராக்ஸ் உரிமையாளர் வேதாரண்யம் அவர்கட்கும், சொல்லடைவில் உதவி செய்த திருமதி ஜி. செல்வலட்சுமி, திரு கோ. உத்திராடம் ஆகியோருக்கும், கணினியில் அச்சிட்டு உதவிய திருமதி. எஸ். தாரா, திருமதி ஆர். கீதா அவர்களுக்கும், நன்முறையில் அச்சிட்டு உதவிய மாணவர் மறுதோன்றி அச்சகத்துக்கும் என்னுடைய நன்றி உரியது.

**ஆர். ஜயலட்சுமி.**

## Editor's Note

Tamil is one of the ancient and classical languages of the world. It is a veritable treasure of literary works and grammar treatises of very high calibre. Manuscripts of many such works would have perished either on account of Nature's ravages or the ignorance of those who did not realize the value of such works kept by them. Many institutions and dedicated individuals took upon themselves the strenuous task of collecting the valuable works which were mostly found as palmleaf manuscripts. They also published the works with great care and proper editing. Many works were also translated into English to enable global readership and awareness of the Tamil Literature and language.

The Institute of Asian Studies has played a notable and commendable role in the publication of such manuscripts mentioned above. They have published several ballads and pieces of *Ciṟṟilakkiyam* (minor literature) such as *Kalampakam* and *Kōvai* from palmleaf manuscripts. Their painstaking effort is evident from the fact that a manuscript entitled *Varma Cūttiram* was traced by them in a remote corner of Japan and brought here to be published. Besides literary works treatises in other subjects like mathematics have also seen the light of the day thanks to the efforts of this institute. *Akattīcar Kalampakam* is the thirty first venture of the Institute in this regard.

This poetic work of *Ciṟṟilakkiyam* (minor literature) category was found in the Government Oriental manuscripts library numbering R-7611. This work is now edited and published first by the Institute of Asian Studies.

## Details of the manuscripts

The author of *Akattīcar Kalampakam* is **Irāma Vaittiyanāta Carma**, a native of **Akattiyāṉpaḷḷi.** This work was written by him about sixty years ago. He has written 101 songs. As the manuscript is in the author's own handwriting it is the original manuscript.

In the year 1961-62 the author's younger brother **Harihara Carma** who lived at **Piḷḷaiyār Kōvil Street** in **Tiruvallikkēṇi** handed over this manuscript and the manuscript of another work entitled *Tēvi Pākavatam* written by the same author to the Government Oriental Manuscripts Library. (No.7602-7610)

The author of this work was a great scholar and poet who was known as **Kaviccakravartti** (emperor among poets). As he had himself written the manuscript there are no mistakes of any kind in the work. The handwriting is also quite legible. There are no errors of spelling or lettering of words. Only ballads and medicinal treatises written by laymen contain such errors. Literary works written by scholarly authors are free from mistakes. Thus *Akattīcar Kalampakam* is free from errors.

## The objective and history of the Edition

The number of *Ciṟṟilakkiyam* works available for publication is dwindling. Hence the need to print and publish such works is quite urgent. Only then they can be preserved for posterity. This work will certainly adorn Tamil Literature as an ornament.

As early as 1985 I wanted to edit and publish this work. On account of other preoccupations in various fields my desire remained unfulfilled. Now after a pretty long period of twenty years God has provided me this opportunity to edit this work. Several others mistook the title of this work i.e., *Akattīcar Kalampakam* to mean a medical treatise written by

**Akastiyar** and did not show interest in publishing it. It was a blessing in disguise for me. Now UNESCO and **Institute of Asian Studies** have joined hands, in publishing ten works contained in manuscripts and I have now the golden opportunity of fulfilling my project.

## Editing

Though the songs were written in legible handwriting the various poetic techniques adopted by the author such as *maṭakku* (Repetitive usage of words and phrases) *Cilēṭai* (punning on words) and *Yamakam* made it difficult to understand the meanings of various songs. However that difficulty was surmounted by God's grace to a considerable extent.

Proper attention has been paid to the formation of lines according to the metrical foot *(Cīr)*. Under each song its paraphrase is given and the meanings of difficult words are provided. The poetic sequential combinations have been divided into their component words and explained. The allusions to mythology, legend and other sources have also been explained. The figures of speech and other poetic nuances adopted by the author have been discussed. The translation of each song is given below the explanatory notes.

In the critique which follows the editor's note all the details regarding *Kalampakam* as a poetic genre, the topography and other features of the shrine **Akattiyāṉpaḷḷi** and the temple and its environs have been furnished elaborately and meticulously. Photographs and sketches have also been included in relevant places as illustrations. An index, a glossary, a list of the author's other poetical works and a genealogical table pertaining to the author have all been furnished in the annexure. A list of *Kalampakam* works published so far and the unpublished ones is also given.

## Acknowledgement

It was **Dr. P.Subramanyam** who proposed that members of the department of manuscriptology should publish atleast one manuscript based work each **Dr. John Samuel**, the Director of the Institute of Asian Studies not only approved the proposal but also provided the necessary financial support and encouragement for implementing the projects. I owe my deep debt of gratitude to him for this unqualified support which spurred me to take up and complete the work. I gratefully acknowledge the kind permission granted by **Dr. Sowndara Pandiyan,** the Curator of Government Oriental Manuscripts Library, to copy the manuscript. I also thank the other staff members of the library who lent me their support.

I have to thank heartily **Thiru. Vedaratnam** of **Vēdarānyam** who guided and helped me a lot when I had been to **Akattiyāṉpaḷḷi** to see the temple for collecting additional details and verifying the available ones. He is the grandson of the famous freedom fighter **Cartār Vētaratṉam Piḷḷai**. He is incharge of **Kasturpā Kanyā Kurukulam** founded by his illustrious grand father. He made my stay quite comfortable at **Vētāraṇyam.** I can never forget his hospitality and I express my gratitude to him.

As mentioned earlier it was **Mr. Harihara Carma** the brother of the author who handed over the manuscript of this work the Government Oriental Library. I wanted to thank him for this great service to Tamil Literature. But when I tried to locate him at the old address furnished during 1961, I could not find him.

I was about to give up my effort after several fruitless enquiries in that street and locality. Fortunately for me I came to know that **Harihara Carma**'s son is the famous **Kaṭam Vitvāṉ H. Vināyakarām**. Then everything went off well as **Mr. Vināyakarām** not only expressed his

happiness at our efforts to publish his uncle's work but also furnished me all details about the author. It is really a godsent boon to me to get the help of such a busy celebrity as **Vināyakarām**. I hereby express my gratitude to him.

I hereby express my gratitude to Mr. Y. Antonicamy, Dr. G. Selva lakshmi, Mr. G. Uttiradam, Mrs. S.Thara , Mrs. R. Geetha for their assistance in word index, Computer Printing and other help.

I thank **Nathan Xerox**, Vedaranyam for helping me to get the Map of **Akattiyāṉpaḷḷi**. And I thank **Student Xerox** for neat and good printing.

விகாரமாகியுள்ளது. கலப்பாகிய செய்யுட்களை, பொருண்மைகளைத் தன்னகத்தே கொண்டது என்னும் பொருள் பொருந்த இத்தொடர் அமைந்துள்ளது.[4]

கலம் + பகம் எனப் பிரித்து, கலம் – 12, பகம் – அதில் பாதி – ஆறு; பன்னிரண்டும் ஆறும் சேர்த்துப் பதினெட்டு உறுப்புகளையுடைய நூலாதலின் கலம்பகம் எனப் பெயர் பெற்றது என்பாரும் உளர்.[5]

பெரும்பாலான பாட்டியல் நூல்கள் பதினெட்டு உறுப்புகளையே கூறுவதால் இக்கூற்று ஓரளவு பொருந்தலாம். ஆனால் மூன்றாவதாக ஒரு கருத்தை ஓர் ஆய்வாளர் கூறுகிறார். “கலபம் என்றால் மயில் தோகையை விரிப்பதால் இப்பெயர் ஏற்பட்டது. எனவே கலம்புதல் என்றால் விரித்தல், புகழ்தல். பாட்டுடைத் தலைவனின் புகழ் விரிக்கப் படுவதால் கலம்பகம் என்று பெயர் பெற்றது” என்பது அவர் கூற்று.[6]

பெரும்பாலான கலம்பக நூல்கள் பதினெட்டு உறுப்பிற்குமேல் பெற்றிருப்பதாலும், இலக்கியங்கள் அனைத்துமே பாட்டுடைத் தலைவனின் புகழைக் கூறுவதாலும், கலம்புதல் என்ற சொல் இன்மையாலும் இவ்விரு கூற்றும் பொருந்தா. முதற் கூற்றே பொருத்தமுடையது.

### கலம்பக இலக்கணம்

சிற்றிலக்கியங்களின் இலக்கணம் கூறும் பாட்டியல் நூல்களில் கலம்பக இலக்கணம் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

பன்னிரண்டாம் நூற்றாண்டினது என்று கருதப்பெறும் **பன்னிருபாட்டியல்** கூற்றுப்படி, கலம்பகம் என்பது நூலின் தொடக்கத்தில் ‘ஒருபோகு’ என்னும் யாப்புப் பெற்று, அதன்பின் ஒரு வெண்பா ஒரு கலித்துறை பெற்று, புயம், அம்மானை, ஊசல், யமகம், களி, மறம், சித்து, காலம், மதங்கி, வண்டு, மேகம், கைக்கிளை, சம்பிரதம், தவம் என்னும் 14 உறுப்புகளுடன் அமைய வேண்டும். இவையாவும் அகவல், விருத்தம், வஞ்சித்துறை எனப் பல்வகைப் பாக்களாலும், பாவினங்களாலும் அமைந்து அந்தாதியாய் வரவேண்டும். இவையன்றி கடவுள் மீது பாடப்படும் போது 100 பாடல்கள், முனிவர்க்கு 95, அரசர்க்கு 90, அமைச்சர்க்கு 70, வணிகர்க்கு 50, வேளாளர்க்கு 30 என்று பாடல் எண்ணிக்கை வரையறையும் கூறப்படுகிறது.[7]

இதே பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய **வெண்பாப்பாட்டியல் அல்லது வச்சணந்தி மாலை** முன்னர் கூறிய பதினான்கு உறுப்புகளுடன், பாண், ஊர், தழை.

இரங்கல் ஆகிய நான்கு உறுப்புகளைக் கூட்டிப் பதினெட்டு உறுப்புகளைக் கூறுகிறது. வெண்பா, மருட்பா, கலிப்பா வகைகளையும் பாடல் அமைப்பில் சேர்க்கிறது. பாடல் எண்ணிக்கை வரையறையில் பன்னிரு பாட்டியல் வரையறையே பின்பற்றப்படுகிறது.[8]

14ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த **நவநீதப் பாட்டியல்,** பன்னிரு பாட்டியல் கூறும் பதினான்கு உறுப்புகளில் வண்டு, தவம் இரண்டையும் விடுத்து. குறம், தூது என்னும் இரண்டையும் சேர்த்து, பதினான்கு உறுப்புகளைச் சுட்டுகிறது.[9]

பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்த **பிரபந்த மரபியல்,** வெண்பாப் பாட்டியல் கூறும் 18 உறுப்புகளோடு, குறம் என்பதைச் சேர்த்துப் பத்தொன்பது உறுப்புகளைக் கூறுகிறது.[10] இதே நூற்றாண்டைச் சேர்ந்த **சிதம்பரப் பாட்டியல்** இப்பத்தொன்பது உறுப்புகளோடு மருள் என்பதைச் சேர்த்து இருபதாக்குகிறது.[11]

17ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த **இலக்கண விளக்கமும்** இதே இருபது உறுப்புகளைக் கூறுகிறது. இதோடு இறுதிப் பாட்டின் இறுதிச் சீர் அல்லது எழுத்து முதல் பாட்டின் முதலில் வரும் மண்டலித்த அந்தாதியாக இருக்க வேண்டும் என்ற குறிப்பையும் சுட்டுகிறது.[12]

18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த **தொன்னூல் விளக்கம்,** காலம், கார், பாண், மருள், களி என்னும் ஐந்துறுப்புகளை நீக்கிக் காற்று என்னும் உறுப்பைச் சேர்த்துப் பதினாறு உறுப்புகளைக் கூறுகிறது.[13]

19 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த **முத்து வீரியம்,** 'இலக்கண விளக்கம்' கூறும் இருபது உறுப்புகளில் மடக்கு, மருள் இரண்டையும் விடுத்துப் பதினெட்டு உறுப்புக ளாக்குகின்றது.[14] இதே நூற்றாண்டைச் சேர்ந்த **பிரபந்த தீபிகையும்** இதே பதினெட்டு உறுப்புகளைக் கூறுகிறது.[15]

**பிரபந்தத் திரட்டு** என்னும் பாட்டியல் நூலில் வெண்பாப் பாட்டியல் கூறும் பதினெட்டில் சித்துக்கு மாறாகத் தூது சேர்க்கப்பட்டுள்ளது.[16] இவ்வாறு பெரும்பாலான பாட்டியல் நூல்கள் பதினெட்டு உறுப்புகளையே சுட்டுகின்றன.

பிற்காலத்தில் கொற்றியார், பிச்சியார், வலைச்சியார், கீரையார், இடைச்சியார் என்று எந்தப் பெண்ணைப் பார்த்தும் காமுற்றுப் பாடுவது போன்ற பாடல்களைப் புலவர்கள் சேர்த்து விட்டனர். மேகம், வண்டு என்று இரு பொருள்களை மட்டும் தூதாக்கும் நிலை மாறிப் பல பொருள்களைத் தூதாக்குவதும் வழக்கில் வந்து

விட்டது. இது போன்றே இரங்கல் என்ற துறையும் சுரம்கண்டு இரங்குதல், பொழுதுகண்டு இரங்குதல், கழிக்கரைப் புலம்பல், சந்திரனைப் பழித்தல், மன்மதனைப் பழித்தல் எனப் பலவாறு பெருகி விட்டது. இவை தவிர பள், பாத வகுப்பு போன்ற துறைகளும் சேர்ந்து இன்று முப்பதுக்கு மேற்பட்ட கலம்பக உறுப்புகள் காணப்படுகின்றன.

## கலம்பக இலக்கியம் தோற்றமும் வளர்ச்சியும்

தொல்காப்பியர் காலத்தில் சிற்றிலக்கியங்கள் தோன்றவில்லை. "விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே"[17] என்னும் நூற்பாவில் அமைந்த 'விருந்து' என்னும் சொல்லே பல சிற்றிலக்கியங்களுக்குத் தோற்றுவாய் என ஆய்வாளர் பலரும் கூறுவர்.[18] ஆனால் கலம்பக இலக்கியத்துள் உள்ள துறைகள் பலவும், யாப்பும் தொல்காப்பியத்திலேயே சுட்டப்பட்டுள்ளன. கலம்பகத்தின் முதற்பாடல் 'கொச்சக ஒருபோகு' அல்லது 'மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா. இது தேவரைப் பாடுவதற்கான யாப்பு என்பது தொல்காப்பியர் விதி[19] கலம்பக இலக்கியங்கள் பெரும்பாலும் இறைவனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, முதல் பாடல் இறைவனின் புகழையே பாடுவதால் தொல்காப்பியர் விதிப்படி அமைவது குறிப்பிடத்தக்கது. கலம்பகத்தில் வரும் கைக்கிளை, பாண், மடல், இரங்கல், தூது, வெறிவிலக்கு, உடன்போக்கு ஆகிய உறுப்புகள் தொல்காப்பியத்திலேயே இடம் பெற்றுள்ளன. சங்க இலக்கியங்களில் இவ்வுறுப்புகளின் வளர்ச்சி பெற்ற நிலையைக் காண முடிகிறது. சிலப்பதிகாரத்தில் அம்மானை, ஊசல் போன்ற உறுப்புகளையும், **தேவாரம்**, **திருவாசகம்**, **திவ்வியப் பிரபந்தம்** போன்ற பக்தி இலக்கியங்களில் இவற்றோடு, தூது, இரங்கல், அம்மானை, ஊசல் போன்ற பிற துறைகளையும், இறைவனைப் பல வழிகளில் புகழ்தலையும் காண்கிறோம்.

ஆயினும் முதன் முதலில் கலம்பகம் என்ற முழுவடிவில் கிடைக்கும் நூல் ஒன்பதாம் நூற்றாண்டில் அரசன் மீது பாடப்பட்ட **நந்திக் கலம்பகமே** யாகும். இதனைப் பின்பற்றியே பல கலம்பக நூல்கள் நமக்குக் கிடைக்கின்றன. ஆனால் இதன் சிறப்பைக் காணும் போது வேறு பல கலம்பக நூல்கள் இதற்குமுன் இருந்து நமக்குக் கிடைக்காமற் போயிருக்குமோ என்ற ஐயமும் எழாமலில்லை.

இதன் பிறகு சமயப் பெரியார் மீது பாடப்பட்டதான **ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்** நம்பியாண்டார் நம்பிகளால் பத்தாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. இதுவே இரண்டாவது கலம்பகமாகவும், முனிவர் மீது பாடப்பட்ட முதற்கலம்பகமாகவும் அறிஞர் பலரால் கருதப்பட்ட போதிலும்[20] உதீசித் தேவரால் இயற்றப்பட்ட

**திருக்கலம்பகம்** இதற்கு முந்தையதாக இருந்திருக்கலாம் என்னும் கருத்தும் ஏற்றுக் கொள்ளத் தக்கது.[21] ஏனெனில் உதீசித் தேவர் 14, 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர், என்று சிலர் கூறினாலும்[22] 10 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்ற கருத்தும் உண்டு.[23] "**சீவக சிந்தாமணி**யை எதிர்த்துப் **பெரியபுராணம்** தோன்றியது போலத் **திருக்கலம்பகம்** தோன்றியிருக்கலாம்" என்ற கூற்றையும், "**திருக்கலம்பகம்** என்ற ஒன்று முன்னர் இருந்தமையாலேயே அடுத்துவந்த நூல் **ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்**எனப் பெயர் பெற்றது" என்ற கூற்றையும்[24] மறுப்பதற்கில்லை. எனவே கலம்பக வளர்ச்சியில் இரண்டாவது இடம் திருக்கலம்பகத்துக்கா, ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகத்துக்கா என்னும் வினாவுக்கு விடை மேலும் ஆய்வுக் குரியது.

12 ஆம் நூற்றாண்டில் **செஞ்சிக் கலம்பகம்** என்ற கலம்பகத்தைப் புகழேந்திப் புலவர் எழுதியதாகத் தெரிகிறது. அது தற்போது கிடைக்கவில்லை. கொற்றந்தைக் கலம்பகமே செஞ்சிக் கலம்பகமாக இருக்கலாம் என்று கூறும் ஓர் ஆய்வாளர் தொண்டை மண்டல சதகத்தின் பின்வரும் பாடலை அதற்கு ஆதாரமாகக் காட்டுகிறார்.[25]

காரார் களந்தைப் புகழேந்தி
    சொன்ன கலம்பகத்தி
னேரான நையும் படியென்ற
    பாடலை நேரியர்கோன்
சீராகச் செப்பிய நற்பாடல்
    கொண்டவன் **செஞ்சியர்கோன்**
மாராபி ராமனங் **கொற்றந்தை**
    யூர்தொண்டை மண்டலமே.

14 ஆம் நூற்றாண்டில் தொல்காப்பிய தேவரின் **திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம்**, இரட்டையர்களின் **தில்லைக் கலம்பகம்**, **திருவாமாத்தூர்க் கலம்பகம்** ஆகியவை தோன்றின.

15 ஆம் நூற்றாண்டில் பிள்ளைப் பெருமாள் ஐயங்காரின் **திருவரங்கக் கலம்பகமும்**, 16ஆம் நூற்றாண்டில் தத்துவராயரின் **ஞானவிநோதன் கலம்பகம்**, ஞானப்பிரகாசரின் **கச்சிக் கலம்பகம்** ஆகியவையும் தோன்றின.

17 ஆம் நூற்றாண்டில் குமர குருபரரின் **காசிக் கலம்பகம், கயிலைக் கலம்பகம், மதுரைக் கலம்பகம்,** துறைமங்கலம் சிவப்பிரகாசர் இயற்றிய **சிவஞான சுவாமிகள் கலம்பகம், திருவெங்கைக் கலம்பகம்,** படிக்காசுப் புலவரின் **புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம்,** எல்லப்ப நாவலரின் **திருவருணைக் கலம்பகம்,** அந்தகக்கவி வீரராகவ முதலியாரின் **சேயூர்க் கலம்பகம்,** சுவாமிநாத தேசிகரின் **திருச்செந்திற் கலம்பகம்,** ஈசான தேசிகரின் **செந்திற் கலம்பகம்** எனப் பத்திற்கு மேற்பட்ட கலம்பகங்கள் தோன்றின. இக்காலத்துத் தோன்றிய கலம்பகங்கள் யாவும் சைவக் கலம்பகங்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

18 ஆம் நூற்றாண்டில் ஏழு கலம்பகங்களே தோன்றின என்றாலும், பெண்ணின் மீது பாடப்பட்ட **திருக்காவலூர்க் கலம்பகம்,** சவ்வாதுப் புலவரால் பாடப்பட்ட **நாகைக் கலம்பகம்** எனக் கிறித்தவ இசுலாமியப் புலவர்களும் கலம்பக இலக்கியத்தில் கருத்துச் செலுத்தியதைக் காண முடிகிறது.

19 ஆம் நூற்றாண்டில் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் **வாட்போக்கிக் கலம்பகம்** முதல் முப்பத்தைந்து கலம்பகங்கள் தோன்றின. கலம்பக இலக்கிய வளர்ச்சியின் உச்ச கட்ட காலமாக இதனைக் கூறலாம். இக்கால கட்டத்தில் **நசரைக் கலம்பகம், இம்மானுவேல் கலம்பகம், மக்காக் கலம்பகம், நாகூர்க் கலம்பகம், மதீனாக் கலம்பகம், பதாயிருக்குக் கலம்பகம்** போன்ற கிறித்தவ இசுலாமியக் கலம்பகங்கள் தோன்றிக் கலம்பக வளர்ச்சிக்கு உதவியுள்ளன.

19 ஆம் நூற்றாண்டில் முப்பத்தைந்துக்கு மேல் கலம்பக இலக்கியங்கள் தோன்றி வளர்ச்சி பெற்ற நிலைமாறி இருபதாம் நூற்றாண்டில் பதினேழு கலம்பகங்களே தோன்றிச் சிற்றிலக்கிய வளர்ச்சி குன்றியதைக் காணுகிறோம். அரசர், இறைவன், முனிவர் என்று பலரைப் பற்றிப் பாடிய நிலைமாறி பாரதியார் காலம் முதல் சமூகம், நாடு, இயற்கை எனப் பாடும் நிலை வந்ததும், அச்சு யுகம் வந்து உரைநடை வளர்ச்சி பெற்றதும், புதுக் கவிதைகளின் ஆக்கமும், அரிய நடையில் பாடல் இயற்றும் புலமைக் குறைவுமே சிற்றிலக்கியங்கள் குன்றக் காரணம் எனலாம்.

## அகத்தீசர் கலம்பகம்

தற்போது பதிப்புக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள அகத்தீசர் கலம்பகம் என்பது நாகை மாவட்டம் **வேதாரண்யத்துக்கு** (திருமறைக்காடு) அருகேயுள்ள **அகத்தியான் பள்ளி** என்னும் ஊரிலுள்ள சிவபெருமான் மீது பாடப்பட்ட கலம்பகமாகும்.

## அகத்தியான் பள்ளி – பெயர்க்காரணம்

இமய மலையில் பார்வதிக்கும், சிவபெருமானுக்கும் திருமணம் நடைபெற்ற போது தேவர், முனிவர் அனைவரும் அங்கு சென்றதால் பூமியின் வடகோடு கீழே அழுந்தித் தென்கோடு உயர்ந்ததாகவும், அதனால் பூமியைச் சமனாக்கச் சிவன் அகத்தியரைத் தெற்கே அனுப்பியதாகவும் புராணக் கதை ஒன்றுண்டு.[26]

அகத்தியர் சிவனின் திருமணத்தைத் தான் எப்போது பார்ப்பது என்று கேட்கச் சிவன், தன் திருமணக் காட்சியைக் காட்டியதாகப் பல ஊர்கள் குறிப்பிடப்படு கின்றன. அவற்றுள் ஒன்று திருமறைக்காடெனும் வேதாரண்யம். இவ்வூரில், தான் திருமணக் கோலத்தோடு காட்சி தருவதாக இறைவன் கூற, அக்காட்சியைக் காண அங்கு வந்த அகத்தியர் அவ்வூரின் அருகே தங்கிச் சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்து வழிபட்டு வந்தார்.[27] அகத்தியர் தங்கிய இடம் ஆதலால் இது அகத்தியான் பள்ளி எனப்பட்டது. அகத்தியரால் வழிபடப்பட்ட ஈசன் அகத்தீசன் எனப்பட்டான். பள்ளி என்பது, இடம், சிற்றூர், நகரம், இடைச்சேரி, முனிவராசிரமம், சைன பௌத்தக் கோயில், அரண்மனை, படுக்கை, பள்ளிக்கூடம், அறச்சாலை, அறை என்ற பல பொருள்களைத் தரும் சொல்.[28] ஆதியில் சமண, பௌத்தக் கோயில்களே பள்ளி எனப்பட்டாலும், பிற்காலத்தில் அவை சைவ வைணவக் கோயில்களாக மாறியதும் அதே பெயர் தொடர்ந்துள்ளமையைத் திருச்சிராப்பள்ளி, திருச்செம்பொன் பள்ளி, திருக்காட்டுப் பள்ளி, மகேந்திரப் பள்ளி, சக்கரப் பள்ளி, பார்த்தன் பள்ளி, என்னும் ஊர்ப் பெயர்களால் அறியலாம். தற்போது முகமதியர் தொழுகை இடங்கள் கூட பள்ளி வாசல் என அழைக்கப்படுவதைக் காணும் போது பள்ளி என்பது எல்லாச் சமயக் கோயில்களுக்கும் பொதுப்பெயர் என்பதை உணர முடிகிறது. சமண பௌத்தப் பள்ளிகள், சமண, பௌத்தத் துறவிகள் வாழிடத்தைக் குறித்த தொடராகவும் வந்துள்ளது.[29] எனவே இங்கு அகத்தியான் பள்ளி என்பது அகத்தியர் பூசித்த கோயில் அகத்தியர் தங்கியிருந்த பர்ணசாலை என்னும் இரண்டையும் குறிக்குமாயினும் பின்னதே சிறப்புடைத்து.

## இருப்பிடம்

திருமறைக் காட்டிலிருந்து கோடியக்கரை செல்லும் வழியில் இரண்டு கி.மீ தொலைவில் உள்ளது அகத்தியான் பள்ளி. இப்பெயரில் புகைவண்டி நிலையமும் உள்ளது. இவ்வூரைச் சுற்றிலும் காடுகள் நிறைந்த பகுதியாதலால் பல ஊர்களும் காடு, தோப்பு என்றே பெயரிலேயே வழங்கப்படுகின்றன. மேற்கே பயத்தவரன்காடு,

வடக்கே மூர்த்தியன் காடு, கிழக்கே தீவன் காடு, தெற்கே இசக்காடு, வடமேற்கே ராஜாளிக் காடு, ஆகிய ஊர்களால் சூழப்பட்டுள்ளது இவ்வகத்தியான் பள்ளி. வடக்கேயுள்ள திருமறைக் காடும், தெற்கேயுள்ள கோடியக்கரை குழகர் கோயிலும் பாடல் பெற்ற தவங்கள்.

## அகத்தீசர் கோயில்

திருமறைக் காட்டிலிருந்து கோடியக்கரை செல்லும் சாலை ஓரத்திலேயே கிழக்கு நோக்கி அமைந்துள்ளது அகத்தீசர் கோயில். இறைவன் பெயர் அகத்தீசர். இறைவி பெயர் பாகம்பிரியாள்.

## கோபுரம்

முன்னால் மூன்று நிலை மாடத்துடன் கோபுரம் உள்ளது. முதல் நிலையில் நடுவில் இரு தூண்கள் உள்ளன. அதன் இருபுறமும் இரு துவார பாலகர்கள், அடுத்த இருநிலையைத் தாங்கும் வடிவில் உள்ளனர். அதிட்டானமானது உபானம், ஜகதி, முப்பட்டைக் குமுதம், பட்டி, கண்டம், வேதிகைகளுடன் காணப்படுகின்றது. சுவர்களில் அரைத்தூண்கள் பக்கத்துக்கு ஐந்து உள்ளன. மேலே வெட்டு முனை போதிகைகளும், உத்தர நுனிகளும் கூடுகளும் காணப்படுகின்றன. அரைத்தூண்கள் கலசம், குடம், பலகை, பத்மம், போதிகைகளோடு உள்ளன. (அட்டைப் படம்)

## அகத்தீசர் சந்நிதி

கோபுரத்தை அடுத்து நந்திமண்டபமும் (படம் 1) நந்தி மண்டபத்துக்கு நேர் எதிரே அகத்தீசர் சந்நிதியுமுள்ளன. அகத்தீசர் சந்நிதி, கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபத்துடன் உள்ளது. அர்த்த மண்டபத்தில் இருபுறமும் இருதூண்கள் உள்ளன. ஒரு தூணில் அகத்தியர் புடைப்புச் சிற்பம் காணப்படுகின்றது (படம் 2). கருவறை வெளிச்சுவர் – உபானம், பத்மவரி, ஜகதி, விருத்த குமுதம், கண்டம், பட்டி, வேதிகைகளுடன் கூடிய அதிட்டானம் பெற்று சுவரில் உருண்டை வடிவில் அமைந்த அரைத்தூண்களுடன் உள்ளது. அரைத் தூண்கள் நாகபந்தக்கட்டுடன், சதுரமான கபோதக் கட்டும் புஷ்ப போதிகையும் பெற்று விளங்குகின்றன. (படம் 3) சுவரின் மேல்பாகம் பூதவரிக்கு மாறாக எழுதகப்படை பெற்று கபோதத்தின் மேல் யாளி வரிகளுடன் காணப்படுகின்றது.

சுற்றிலும் மூன்றடி பிரகாரம் கட்டப்பட்டு மண்டபம் போல் அமைந்துள்ளது. வடபுறத் தேவகோட்டத்தில் துர்க்கையும், தென்புறத் தேவகோட்டத்தில் தட்சிணா மூர்த்தியும் உள்ளனர். தேவ கோட்டத்தைச் சுற்றி மண்டபம் உள்ளது (படம் 4). பின்புறம் மட்டும் திருச்சுற்று மாளிகை அமைக்கப்பட்டு இலக்குமி, முருகன், விநாயகர் சந்நிதிகள் உள்ளன. நந்திமண்டபத்துக்கு முன் வலப்புறம் தெற்கு நோக்கிப் பாகம் பிரியாள் சந்நிதி உள்ளது (படம் 5) அங்குத் தேவார மூவர்களின் திருவுருவங்கள் உள்ளன (படம் 6). முன்னர் வழிபடப்பட்ட அம்பிகை சிலை ஒன்று வெளியில் மரத்தடியில் உள்ளது (படம் 7). அகத்தியர் கோயில் சிறு அளவில் உள்ளது. இதில் அகத்தியர் சிலை இரண்டடி உயரத்துடன் தாடி, தண்டம், கமண்டலத்துடன் அமர்ந்த நிலையில் உள்ளது (படம் 8).

### கோயிலின் காலம்

சம்பந்தரால் பாடப்பட்ட தலம் ஆதலால் அகத்தீசுவர் கோயில் ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பே உருவான தலம் என்பது தெளிவு. அகத்தியர் காலத்தில் (கி.மு. ஆக இருக்கலாம்) லிங்கப்பிரதிட்டை மட்டும் செய்யப்பட்டு அதன்பின் மண், செங்கல் இவற்றால் சிறு கோயிலாக அமைக்கப்பட்டுத் தேவார காலத்துக்குப் பின் கற்றளி ஆக்கப்பட்டிருத்தல் வேண்டும். தற்போதுள்ள அமைப்பு கி.பி. 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. தட்சிணாமூர்த்தி, அகத்தியர், அம்பிகை ஆகியோரின் உருவ அமைப்புகளும், தூண்களின் நாகபந்த அமைப்பும், கருவறைச் சுவர்களிலிருந்து 1904 இல் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகளும் இதனை உறுதிப்படுத்துகின்றன.

### தேவாரத்தில் அகத்தியான் பள்ளி

திருமறைக் காட்டில் வேதங்கள் இறைவனை அருச்சித்துவிட்டுக் கதவை அடைத்துச் சென்றுவிட்டன. அடைக்கப் பட்ட கதவைத் திறக்கப் பாடியவர் திருநாவுக்கரசர். மூடப் பாடியவர் சம்பந்தர். சுந்தரரும் திருமறைக்காட்டீசனைப் பாடியுள்ளார். கோடியக்கரையிலுள்ள குழகரையும் பாடியுள்ளார். இவ்வாறிருக்க இரண்டுக்கும் இடையிலுள்ள திருமறைக்காட்டுக்கு மிக அருகேயுள்ள அகத்தீசுவரரைச் சம்பந்தர் மட்டுமே பாடியுள்ளார் என்பது வியப்பாயுள்ளது. மற்ற இருவரும் பாடவில்லையா? பாடியவை கிடைக்கவில்லையா என்று தெரியவில்லை. காந்தாரப் பண்ணில் சம்பந்தர் பாடிய ஒரு பதிகம் மட்டுமே தற்போது கிடைக்கிறது.[30]

இப்பதிகத்தில், “அகத்தியான் பள்ளி இறைவன் தலைமாலை சூடி இடுகாட்டு எரியே விளக்காக ஆடியவன், கொன்றை, ஊமத்தை, திருநீறு அணிந்தவன், காலனை உதைத்தவன், முப்புரம் எரித்தவன், புலித்தோல் உடுத்தியவன், காமனை எரித்தவன், யானையுரி போர்த்தவன், தக்கன் வேள்வியை அழித்தவன், பிரமன் தலை அறுத்தவன், இராவணனின் இருபது தோள்களை நசுக்கியவன்.” என்னும் வழக்கமான செய்திகளைக் கூறி “இவ்விறைவன் உறையும் அகத்தியான் பள்ளியை நினைத்தவர் வினை ஓடும்; அவர்களுக்குப் பாவம் இல்லை; “பௌத்தர், சமணர் உரை பொய்ம்மொழி அவற்றைக் கேட்காதீர்! எங்கள் அகத்தியான் பள்ளி அந்தணனை வணங்குங்கள்” என்கிறார். அவர் காலத்தில் சமணர், பௌத்தர் அகத்தியான் பள்ளியிலும் இருந்திருக்க வேண்டும்.

## கல்வெட்டுச் செய்திகள்

1904 – இல் கல்வெட்டாய்வாளர்கள் இக்கோயிலை ஆய்வு செய்த போது ஐந்து கல்வெட்டுகள் கிடைத்தன. ஆனால் அவை பின்பு உடைக்கப்பட்டுச் சிமெண்ட் பூசப்பட்டு விட்டன. தற்போது கல்வெட்டு ஏதும் இல்லை.

கல்வெட்டில் அகத்தியான் பள்ளி, **உம்பள நாட்டுக் குன்றூர் நாட்டுத் திருவகத்தியான் பள்ளி** என்றும் **உம்பர் வளநாட்டுக் குன்றூர் நாட்டுத் திருவகத்தியான் பள்ளி** என்றும் குறிக்கப்படுகிறது. உம்பர் வளநாடுதான் உம்பளநாடு என்று மருவியது என்று சொல்லலாமென்றால் கி.பி. 926 இலும் தொடர்ந்தும் **உம்பளநாடு** என்றே குறிப்பிடப்பட்ட இப்பகுதி 1299 – இல் **உம்பர் வளநாடான தரணி முழுதுடையவளநாடு** என்று குறிக்கப் பெறுகின்றது.[31] உப்பளங்கள் நிறைய இருந்ததால் உம்பள நாடு என்று வழங்கிப் பின்னர் உம்பர் வளநாடு ஆகியிருக்கலாமோ என்று தோன்றுகிறது.

அகத்தீசர் கருவறையின் (Centre shrine) தென்பகுதி உபானத்தில் காணப்பட்ட கல்வெட்டொன்று மூன்றாம் ராஜராஜனின் இரண்டாம் ஆட்சியாண்டில் (1218) மாசி மாதம், வளர்பிறை, திவிதியை, திங்கட்கிழமை, சதய நாளில் வெட்டப்பட்டது. இது முப்பது வட்டத்துக்கு காணியுடைய சிவப்பிராமணர் அன்றாடு நற்காசு 1500ஐ ஒரு நந்தா விளக்கு எரிப்பதற்காகப் பெற்றுக் கொண்ட செய்தியைக் கூறுகிறது.[32]

தென்பகுதிச் சுவரில் இரு கல்வெட்டுகள் இருந்தனவாகக் கூறப்படுகின்றன. ஒன்று மாறவர்மன் வீரபாண்டியனின் பதினைந்தாவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்டது.

இது அகத்தீசுவரர்க்குக் காலைசந்தி பூசைக்காக 2000 குழி நிலம் தானம் செய்ததைக் குறிப்பிடுகிறது. திரிபுவன சுந்தர தேவர் ஓடை வேலிக்கு மேற்கு, அனிழமாட்டு ஓதம் எறுகாலுக்கு வடக்கு, ஊர் ஒழுக்கைக்குக் கிழக்கு, பள்ளன் ஓடைப் பனங்காட்டுக் குன்று வேலிக்குத் தெற்கு என்று நான்கெல்லைக்கு உட்பட்ட தரிசு நிலத்தை எழுமூர் கிழவனான அரையன் போயன் விழுப்பரையன் என்பவன் பண்படுத்திப் பயிர்செய்து வருடத்துக்கு இருபது கலம் நெல்லும் நாள் ஒன்றுக்கு இருநாழி அரிசியும் ஐந்து பணமும் தர வேண்டும் என்றும் குறிப்பிடுகிறது.[33]

மற்றொன்று விக்ரம பாண்டிய தேவன் காலத்தில் வெட்டப்பட்டது. ஆண்டு தெரியவில்லை. புதன் கிழமை, புனர் பூசம், என்பது மட்டும் தெரிகிறது. மடத்துக்கு நிலம் வந்த செய்தியும், அறுபது பணம் பெற்றுக் கொண்ட செய்தியும் தெரிகின்றன.[34]

வடக்கு உபானத்தில் முதலாம் மாறவர்மன் குலசேகரனின் ஐந்தாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று (1273) இருந்தமை தெரிகிறது. இது தை இருபத்தொன்றாம் தேதி வெட்டப்பட்டுள்ளது. இதில் அகத்திய தேவர் திருமடத்தில் நாளொன்றுக்கு ஓர் ஆள் சாப்பிட ஆகும் செலவாக 150 பணத்தை ஆண்டான் குன்றமெறிந்தார் என்பவர் கோயில் தானத்தாரிடம் கொடுத்த செய்தி குறிப்பிடப் படுகின்றது.[35]

வடக்குச் சுவரில் இருந்த கல்வெட்டு முதலாம் மாறவர்மன் குலசேகரனின் 31வது ஆட்சியாண்டைச் சேர்ந்தது. (கி.பி. 1299) இது குன்றூர் நாட்டவர் அரசன் உடல்நலத்தோடு இருக்க வேண்டும் என்பதற்காக வைகாசி மாதம் அந்த நாளில் அகத்தீசுரமுடையவர்க்குத் திருக்கல்யாண விழா நடத்துவதற்காக ஐந்து வேலி நிலம் வரியில்லாமல் தானம் செய்ததைக் குறிப்பிடுகிறது. தேவதானம் திருவதிகாணிக்கு மேற்கு, ஆதனூர் குலோத்துங்க சோழன் நிலம் புரவரிநல்லூருக்கு வடக்கு, திருமந்திர போனகபுரத்துக்குத் தெற்கு, ஆதனூரர் குலோத்துங்க சோழன் நிலம் தேவதானத்துக்குத் கிழக்கு என்று நான்கு புறம் எல்லைகள் கூறப்படுகின்றன. இந்நிலத்துக்குப் பாகம் பிரியாள் நல்லூர் என்று பெயர் இட்டமையும் தெரிகின்றது.[36]

இவ்வைந்து கல்வெட்டுகள் தவிர கோடியக்கரை குழகர் கோயிலிலும் அகத்தியான் பள்ளியோடு தொடர்புடைய ஒரு கல்வெட்டு உள்ளது. அமிர்த கடேசுவரர் (குழகர்) கருவறை வடபுறச் சுவரில் ஜடாவர்மன் கோ நேரின்மை கொண்டானின் 18 ஆவது ஆட்சியாண்டில் இது வெட்டப்பட்டுள்ளது. அவனுடைய 18 ஆவது ஆட்சியாண்டு முதல் அகத்தீசர் கோயிலுக்கும் குழகர் கோயிலுக்கும் திருப்பணிக்குச்

செலவிடுவதற்காகப் பதினேழாம் ஆட்சி ஆண்டு வரை கொடுத்த பணத்தில் மிஞ்சிய 55 பணத்தோடு 63 பணம் சேர்த்துக் கொடுத்த அரசாணை இது.[37]

### ஊரின் பிற சிறப்புகள்

அகத்தியான் பள்ளியின் பிற சிறப்புகளை அறிய வேண்டுமாயின் வேதாரண்யம் எனப்படும் திருமறைக்காட்டின் சிறப்புகளை அறிய வேண்டியது இன்றியமையாததாகும். வேதாரண்யம் இல்லாமல் அகத்தியான் பள்ளி இல்லை என்னும் அளவுக்குப் புராண வரலாறு, சமூக வரலாறு இரண்டிலும் இவை இணைந்தே இடம் பெற்றுள்ளன.

### வேதாரண்யம் இருப்பிடம்

திருவாரூரிலிருந்து கோடியக்கரை செல்லும் வழியில் கிழக்குக் கடற்கரை ஓரம் அமைந்துள்ளது வேதாரண்யம்.

### பெயர்க்காரணம்

இறைவனை வழிபட்ட வேதங்கள் தாங்கள் அங்கேயே செடி, கொடி, மரமாக வசிக்க வேண்டும் என்று கேட்டு அவ்வாறே வரம் பெற்றதால் இவ்விடம் வேதவனம் – வேதாரண்யம் என்றும், (வேதம் – மறை; வனம், ஆரண்யம் – காடு) தமிழில் திருமறைக்காடு என்றும் பெயர் பெற்றது.[38]

### புராணச் சிறப்பு

மனு, மாந்தாதா, தசரதன், இராமன், பஞ்சபாண்டவர், விசுவாமித்திரர், கௌதமர் ஆகியோரால் பூசிக்கப்பட்ட தலமாகிய வேதாரண்யம் மணிகர்ணிகை, வேதாமிருதம் போன்ற 96 தீர்த்தங்களையுடையது. பதினாறு சபைகளில் பன்னிரண்டாவது இடத்தைப் பெற்று, தேவபக்த சபை என்று பெயரிடப் பெற்றது. சக்தி பீடங்கள் அறுபத்துநான்கில் சுந்தரி பீடமாக விளங்குகிறது. வேதாரண்யப் பெருமையை வடமொழிப் புராணங்களான சனத்குமார சம்ஹிதை, சூத சம்ஹிதை, காளிகா காண்டம், பிரம்மாண்டம், பிரம்ம வைவர்த்தம் ஆகியவற்றில் காணலாம்.

இராமர் இராவணனையும் அவனைச் சார்ந்தவர்களையும் அழித்த போது பிரம்மஹத்தி தோஷம் (பிரம்ம குலத்தில் பிறந்தவர்களைக் கொன்ற பாவம்) பிடித்ததால் அதை நிவர்த்திக்கத் தான் கட்டிய சேது அணை நடுவே உள்ள சத்தியகிரியில் தவம் செய்தார்.[37] அப்போது காசி விசுவேசுவரர் மணிகர்ணிகை நதியோடு தரிசனம் தந்து நீ செய்தது பாபமில்லை என்று கூற இராமர் காசி விசுவநாதரை மணிகர்ணிகை

நதியோடு இங்கேயே தங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டதாக வேதாரண்யத் தலபுராணம் கூறுகிறது.[38] ஆதியில் கட்டிய சேது அணை வேதாரண்யம் என்பர். இதனால் இதற்கு ஆதி சேது என்று பெயர்.[39]

## விடங்கத் தலம்

முசுகுந்தச் சக்ரவர்த்தி என்பவர் தேவேந்திரனுக்குப் படையுதவி செய்தார். மகிழ்ந்த தேவேந்திரன் "உங்களுக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்க "நீங்கள் வைத்துப் பூசிக்கும் தியாகேசரைக் கொடுங்கள்" என்று கேட்டார். முசுகுந்தச் சக்ரவர்த்தி. தேவேந்திரனிடம் தியாகேசர் விக்ரகம் இருப்பது யாருக்கும் தெரியாது. தியாகேசர் தானே கனவில் வந்து முசுகுந்தச் சக்ரவர்த்தியிடம் தன்னைக் கேட்குமாறு கூறியதால்தான் முசுகுந்தச் சக்ரவர்த்தி கேட்டார். அதிர்ச்சியடைந்த தேவேந்திரன் உண்மை விக்ரகத்தைப் போலவே மேலும் ஆறு விக்ரகம் செய்து வைத்து "உனக்கு வேண்டியதை எடுத்துக் கொள்" என்று கூற, உண்மைத் தியாகேசர் காலைத் தூக்கிக் காட்ட, அதனையே எடுத்துக் கொண்டார் முசுகுந்தர். 'உண்மை உருவே போனபின் போலி உருவங்கள் எதற்கு' எனக் கருதிய தேவேந்திரன் ஏழு விக்ரகங்களையும் கொடுத்தனுப்பி விட்டான்.

உண்மை வடிவைத் திருவாரூரிலும், மற்ற ஆறையும் ஆறு ஊர்களிலும் பிரதிட்டை செய்தார் முசுகுந்தர்.[40] அவை ஏழும் சப்தவிடங்கத் தலங்கள் எனப்படும். விடங்கர் என்றால் உளியால் செதுக்கப் படாதவர் என்று பொருள். ஒவ்வொரு ஊரிலும் தியாகேசருக்கு ஒவ்வொரு விடங்கர் என்று பெயர். ஒவ்வொரு ஊரிலும் அவருக்குரியதாக ஒரு நடனம் குறிப்பிடப் படுகிறது. **இச்சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று வேதாரண்யம், விடங்கருக்குரிய பெயரும் நடனமும்.**

1. திருவாரூர் – வீதிவிடங்கர் – அஜபா நடனம்.
2. வேதாரண்யம் – புவனி விடங்கர் – அம்சபாத நடனம்.
3. திருக்காறாயில் – ஆதி விடங்கர் – குக்குடநடனம்.
4. திருநாகை – சுந்தர விடங்கர் – பாராவாரதரங்க நடனம்.
5. திருநள்ளாறு – நகவிடங்கர் – உன்மத்த நடனம்.
6. திருக்கோளிலி (திருக்குவளை) – அவனிவிடங்கர் – பிருங்க நடனம்.
7. திருவாய்மூர் – நீலவிடங்கர் – கமல நடனம்.

மாபலிச் சக்ரவர்த்தி முற்பிறவியில் எலியாக இருந்து இறைவன் விளக்கைத் தூண்டி விட்டதால் மறுபிறவியில் மாபலியாகப் பிறந்தார் என்றும் அவர் நினைவாகவே கார்த்திகை தீபத் திருவிழா நடக்கிறதென்றும் புராணம் கூறும்.[41] அவர் எலியாக இருந்து விளக்கைத் தூண்டியது வேதாரண்யேஸ்வரர் கோயிலில்தான் என்பதும் இவ்வூரின் புராணச் சிறப்புகளில் ஒன்றாகும். இச்செய்தியை அப்பர்,

"நிறைமறைக் காடு தன்னில் நீண்டெரி தீபம் தன்னைக்
கறைநிறத்து எலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட
நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவான் உலகமெல்லாம்
குறைவறக் கொடுப்பர் போலும் குறக்கைவீ ரட்ட னாரே"

என்று பாடுகிறார்.[42]

மனிதன் மரணத்துக்குப் பின் என்னவாகிறான் என்னும் ஆராய்ச்சியில் ஈடுபட்ட கடோபநிஷத்தில் வரும் நசிகேதஸ் இவ்வூர்க் கோயிலில்தான் தவம் செய்தாராம். இவருடைய சிலை கோயிலிலுள்ளது.

## இறைவனும் இறைவியும்

இலிங்க வடிவான மூலவரின் பெயர் மறைக்காட்டு மணாளர். வேதங்களால் பூசிக்கப் பட்டமையால் மறைக்காடர் (வேதாரண்யேசுவரர்). அகத்தியருக்குத் திருமணக் கோலம் காட்டியதால் மணாளர் (படம் 10). இறைவியின் பெயர் யாழைப் பழித்த மொழியம்மை. (வீணாவாத விதூஷிணி, இப்பெயர் அகத்தீசர் கலம்பகத்திலும் இடம் பெற்றுள்ளது பாடல் 33). அம்மை வாய் திறந்து பேசினால் யாழின் இசையைவிட இனிமையாய் இருக்கும். அன்னையின் குரலினிமையைக் கேட்டு, கலைமகள் தன் வீணையைத் துறந்து சுவடி மட்டுமே வைத்துள்ள சிலை இக்கோயிலில் காணப்படுகிறது.

### வரலாற்றுச் சிறப்பு

மறைக்காட்டு நாதர் கோயில் மகாமண்டபத்தின் இடது கோடியில் அர்த்த மண்டபத்தினுள் நுழைய ஒரு சிறு கதவு இருக்கிறது. அது எப்போதும் பூட்டப் பட்டே இருக்கும். மாசிமாதம் நடைபெறும் திருவிழாவில் ஏழாவது நாளில் மட்டுமே அது திறந்து அடைக்கப்படுகிறது. வேதங்கள் இங்கே வந்து இறைவனை வழிபட்டுச் செல்கையில் இத்தலத்தைப் பூட்டிவிட்டுச் சென்றனவாம். சம்பந்தரும், அப்பரும் இத்தலம் வந்தபோது அப்பர் இக்கதவு திறக்க ஒரு பதிகம் பாடினார். சம்பந்தர்

கதவு மூடப் பாடினார் என்பது வரலாறு.[43] பாண்டி நாட்டில் சமணத்தை ஒடுக்கச் சம்பந்தர் புறப்பட்ட தலமும் இது தான். அப்பர், இச்சிறு குழந்தை (சம்பந்தர்) புறப்பட்டுச் சென்று நல்லபடியாகத் திரும்ப வேண்டுமே என்று கவலைப்படச் சம்பந்தர் 'கோளறு பதிகம்' பாடியதும் இத்தலத்தில்தான்.[44]

முதலாம் குலோத்துங்கன் போன்ற சோழமன்னர்கள் திருமறைக் காட்டிலிருந்து தான் ஈழநாட்டின் மீது படையெடுத்தனர். கோடியக்கரையில் அவர்கள் போர்க்கப்பல்கள் ஈசல் போல் மொய்த்துநின்றன. படையெடுப்புக்கு முன் மறைக்காட்டு நாதரை வழிபட்டுவிட்டுத்தான் போருக்குச் சென்றனர். கோயிலில் திருநாள் என்றால், கோயில், மதில், பிரகாரம் எங்கும் ஆயிரக்கணக்கான நெய்விளக்குகள் அந்நாளில் ஏற்றப் படுவது வழக்கம். இதற்காக அக்காலத்தில் அரசர்கள், தளபதிகள், தனிப்பட்டவர்கள், ஆடலரசிகள் பலர் நெய்விளக்குத் தானம் செய்துள்ளனர். பலர் நெய்க்காகச் சாவா மூவாப் பேராடுகள் தானம் செய்துள்ளனர். நெய் விளக்கு என்ற ஊரே திருமறைக்காடு அருகில் உள்ளது. 'திருவாரூர்த் தேரழகு, திருவிடைமருதூர் தெரு அழகு, மன்னார்குடி மதிலழகு, வேதாரண்யம் விளக்கழகு' என்ற பழமொழியும் உண்டு.[45]

### புலவர்கள்

திருவிளையாடற் புராணம் பாடிய பரஞ்சோதி முனிவர் திருமறைக் காட்டில் தான் பிறந்தார். திருமறைக் காட்டுக்கு அருகில் பரஞ்சோதிபுரம் என்ற ஊரே இருக்கிறது. அங்குக் கோயில் கொண்ட இறைவன் பரஞ்சோதிலிங்கம் என்று அழைக்கப் படுகிறார். கமலை ஞானப் பிரகாசர் வழியில் வந்து கும்பகோணப் புராணம், வேதாரண்ய புராணம், திருக்கானப்பேர் புராணம் ஆகியவற்றை எழுதிய அகோர தேவரும் பல பக்திப் பாடல்களைப் பாடிய தாயுமானவரும் திருமறைக்காட்டில் பிறந்தவர்களே.

### சுதந்திரப் போராட்டத்தில் வேதாரண்யமும் அகத்தியான் பள்ளியும்

தாயுமானவர் மரபில் வந்தவர்தான் சுதந்திரப் போராட்டத் தியாகியான சர்தார் வேதரத்தினம் பிள்ளை. இந்தியாவிலேயே சர்தார் என்ற பட்டம் வேதரத்னம் பிள்ளைக்கும் வல்லபாய் படேலுக்கும் மட்டுமே உண்டு. இளம் வயதில் வாழ்க்கையில் ஏற்பட்ட வெறுப்பு காரணமாகப் பத்ரிநாத் சென்ற வேதரத்னம் கோயில் சாத்தி விட்ட படியால் திரும்ப நேரிட்டது. திரும்பும் வழியில் பம்பாயில் தங்கிய போதுதான் சுதந்திர இயக்கம் பற்றி அறிந்தார். இதுவே இவர் வாழ்க்கையின் திருப்புமுனை ஆகி அகத்தியான் பள்ளிக்கும் ஒரு பெருமை ஏற்பட வாய்ப்பாகியது.

வணிகத்தின் பொருட்டு இந்தியா வந்த வெள்ளையர் தங்கள் பொருள்களை இங்கு விற்பதற்காக நம்நாட்டுப் பொருள்களின் மீதெல்லாம் வரி விதித்தனர். வரி போட்டால் நம் நாட்டுப் பொருள் விலை மிகுதியாகும். அவர்கள் நாட்டுப் பொருள் விலை குறைவாயிருப்பதால் மக்கள் அவற்றை வாங்குவர் என்பது அவர்கள் கணக்கு. அக்காலத்தில் பிரிட்டனிலிருந்து கொண்டுவரும் பொருள்களை ஏற்றிவரும் கப்பல்களில் சமன்பாட்டுக்காக மணல் மூட்டைகள் போட்டு வருவது வழக்கம். அதற்கு மாறாக உப்பு மூட்டைகள் போட்டால் அதையும் விற்கலாம் என்று எண்ணிய பிரிட்டிஷ் அரசாங்கம். அவ்வாறே செய்து நம் நாட்டில் மிக மலிவாகக் கிடைத்த உப்பின் மீது வரி விதித்தது. இதை எதிர்த்த இந்திய மக்கள் வரிகொடா இயக்கம் நடத்தினர். வரி கொடுக்காமையால் உப்பை அள்ளத் தடை விதித்தது ஆங்கில அரசு. இதை எதிர்த்து மகாத்மா காந்தி தலைமையில் ஒரு கூட்டம் வடக்கே உள்ள தண்டியில் சென்று உப்பை அள்ளியது. இதுவே புகழ் பெற்ற தண்டி யாத்திரையும், உப்பு சத்தியாகிரகப் போராட்டமும் ஆகும்.

வடநாட்டில் தண்டி யாத்திரை போல் தென்னாட்டில் தடையை மீறி உப்பெடுக்க இராஜாஜி தலைமையில் தீர்மானம் நிறைவேறியது. அப்போது தமிழ் நாட்டில் தூத்துக்குடியும் வேதாரண்யமுமே உப்பு உற்பத்தியில் சிறந்த இடமாகத் திகழ்ந்தன. ஆனால் வேதரத்னத்தின் முயற்சியால் வேதாரண்யத்திலேயே உப்பு எடுக்க முடிவு செய்யப்பட்டது. தமிழகம் முழுவதும் நூறு தொண்டர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டு 1930 ஏப்ரல் 13 காலை 5 மணிக்குத் திருச்சி டாக்டர் எஸ்.எஸ். ராஜன் வீட்டிலிருந்து கால்நடையாகப் புறப்பட்டனர். இவர்களுக்கு உணவு தரக்கூடாது எனக் காவலர்கள் அடித்தும் தடுத்தும் கூட வேதரத்னத்துக்குத் தஞ்சை மாவட்டத்திலிருந்த செல்வாக்கால் வழி முழுவதும் தொண்டர்கள் உணவளித்தனர்.

தொண்டர்கள் தங்கவும் யாரும் இடம் தரக்கூடாது என்று கட்டுப்பாடு விதித்ததால் வேதரத்னம் தம் புகையிலைத் தோட்டத்தின் ஒரு பகுதியை அழித்து முகாம் அமைத்தார். எவ்வளவோ காவலர்கள் சுற்றி வளைத்திருந்தும் நள்ளிரவில் அவர்கள் கண்ணில் மண்ணைத் தூவி விட்டு (ஏமாற்றிவிட்டு) ராஜாஜியும் இன்னும் சிலரும் உப்பை அள்ளி விட்டு அள்ளிய உப்போடு அதே இடத்தில் அமர்ந்திருந்தனர். விடிந்தவுடன் இதைக் கண்ட காவலர்கள் ராஜாஜியைச் சிறையில் அடைத்து விசாரணை செய்தனர். ராஜாஜி உப்பு அள்ளிய இடமும் சிறையில் காவலில் வைக்கப்பட்ட இடமும் **அகத்தியான் பள்ளி**. உப்பு அள்ளிய இடத்தில் நினைவுஸ்தூபி கட்டப்பட்டுள்ளது. (படம் 12). சிறையும் புகைவண்டி நிலையத்தருகே உள்ளது. ராஜாஜி சிறைக்குச்

சென்றபின் சர்தார் வேதரத்தினமும் சட்டத்தை மீறி உப்பெடுத்துச் சிறை சென்றார். தொடர்ந்து சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு 1931–32, 1937, 1940 ஆண்டுகளிலும் சிறை சென்றார். காந்தியாலும், வல்லபாய் படேலாலும் நேரடியாகப் பாராட்டப் பெற்ற இவர் தம் சொத்துகள் அனைத்தும் பறிபோய், மன்னிப்பு கேட்டால் அவை திரும்பக் கிடைக்கும் என்ற நிலைமையிலும் கூட ஆங்கிலேயருக்கு அடிபணிய வில்லை.[46]

நாடு சுதந்திரம் பெறுவதற்கு முன்னும் பின்னும் 1937, 46, 57 ஆகிய ஆண்டுகளில் மும்முறை சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு நாட்டுத் தொண்டு செய்துள்ளார். கல்விக்காக இவர் தோற்றுவித்த கன்னியா குருகுலம் பள்ளி மிகப் பெரிய அளவில் மாணவிகள் தங்கி இலவச உணவும், கல்வியும், தொழிற்கல்வியும் பெறும் இடமாக உள்ளது. இவருக்குப் பின் இவர் மகனும், தற்போது பேரனும் இதனைப் பராமரித்து வருகின்றனர். சர்தார் வேதரத்னம் பிள்ளை அவர்களைப் பாராட்டி நாமக்கல் கவிஞர் பாடிய பாடல் இது.

உத்தமருள் உத்தமனாம் காந்தி யண்ணல்
உவந்து கொள்ளும் படிவாழ்ந்த உயர்ந்த சீடன்
சத்தியத்தைக் கடைப்பிடித்த சாந்த சீலன்
சன்மார்க்க நெறிதவறாச் சமூகத் தொண்டன்
நித்தியமாம் பரம்பொருளே நிறைந்த நெஞ்சன்
நிலவொளிபோல் சிரித்தமுகம் நீங்கா நேயன்
வித்தகனாம் வேதரத்னம் பிள்ளை நாமம்
விளங்கிநிற்கும் அறிவறிந்தோர் வீடு தோறும்.[47]

இத்தகு சிறப்புகளைப் பெற்ற அகத்தியான் பள்ளி இறைவன் மீது பாடப்பட்ட கலம்பகமே அகத்தீசர் கலம்பகம்.

## நூலாசிரியர்

பதிப்புரையில் கூறியபடி இந்நூலை எழுதியவர் இராம. வைத்தியநாதசர்மா என்பவர். இவர் அகத்தியான் பள்ளியில் இராமசேஷ சர்மாவுக்கும், வாலாம்பாள் அம்மையாருக்கும் பிறந்தவர். இளமையிலிருந்தே தமிழ்ப்புலமை பெற்று விளங்கிய இவர் கவி எழுதுவதில் மிகவும் வல்லவர். தேவி பாகவதம் பன்னிரண்டாயிரம் ஸ்கந்தங்களையும், எத்தனையோ சித்திரகவிகளையும், பல பதிகங்களையும் பாடியதால்

இவர் கவிச்சக்ரவர்த்தி என்ற பட்டம் பெற்றதோடு தருமபுர ஆதினப் புலவராகவும் விளங்கியுள்ளார். இவர் எழுதிய பதிகங்களின் பட்டியல் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது. இவருடைய புலமைக்கு இவ்வகத்தீசர் கலம்பகமே சான்று பகரும்.

## நூலமைப்பு

பாட்டியல் நூல்கள் கூறும் இலக்கணப் படி காப்புச் செய்யுளாக ஒரு பாடலையும் நூலின் பகுதியாக நூறு பாடல்களையும் கொண்டுள்ளது அகத்தீசர் கலம்பகம். அகத்தீசரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு ஐவகைப் பாக்களும் பாவினமும் விரவிவர மண்டலித்த அந்தாதியாக அமைந்துள்ளது. அகப்பொருள் மாந்தரின் கூற்றாகவும், ஆசிரியர் கூற்றாகவும் அமைந்து அகத்தீசரின் புகழ் பாடுகிறது. புயவகுப்பு (7), அம்மானை (10), தூது (14, 21, 51, 87, 96), இரங்கல் (11,13,18,22,24,54,55, 72,80,87,93), தழை (17), தவம் (19), களி (26), சம்பிரதம் (30), தாய் அறிவுறுத்தல் (32), கைக்கிளை (35), கீரையார் (39), கார் (40), மறம் (44,45), வண்டு (47), மதங்கு (48), காலம் (52), சீர்பாதப் புகழ்ச்சி (53), இடைச்சியார் (56) ஊசல் (59) பாண் (62), குறம் (68, 69), பிச்சியார் (74), சித்து (75), வலைச்சியார் (77), கொற்றியார் (81) ஆகிய இருபத்தைந்து உறுப்புகளைக் கொண்டுள்ளது.

## கூற்றும் பொருண்மையும்

அகத்தீசர் கலம்பகமாகிய இந்நூலுள் ஆசிரியர் கூற்றாக வரும் பாடல்கள் 60. அவற்றுள் இறைவன் புகழ் பாடுபவை 15. இறைவனைப் புகழ்ந்து 'எனக்கு இதனை அருள்வீராக' என வேண்டுபவை 13. நெஞ்சை நோக்கி இறைவனைப் பணியுமாறு கூறுபவை 9. இறைவனைப் பணிவதால் ஏற்படும் பயன்களைக் கூறுபவை 23. அம்மானை ஆடும் மகளிர் கூற்றாக அமைந்தது ஒரு பாடல். இவை யாவும் பக்திப் பொருண்மையை யுடையவை. கள் வெறியர் கூற்றாகவும் (26), சித்தர்கள் கூற்றாகவும் (30,75), மறவர் கூற்றாகவும் (44, 45), அமைந்தவை ஐந்து பாடல்கள் இவை புறப்பொருள் பற்றியவை.

நற்றாய் கூற்றாக அமைந்தவை 2. மகளைப் பார்த்து இரங்குவது ஒன்று (11). மகளுக்கு அறிவுரை கூறுவது ஒன்று (32).

தலைவி கூற்றாக வருபவை 14. அவற்றுள் இரங்கலாக வருபவை ஆறுபாடல்கள் (13,22,24,72,80,93). மேகத்தையும் (14), நாரையையும் (21), வண்டையும் (47), குயிலையும் (51,87), அன்னம், கிளி, குருகையும் (96) தூது விடுப்பதாக வருபவை

ஆறு பாடல்கள். துன்பத்தைப் பார்த்து உன்னால் என்னைத் துன்புறுத்த இயலாது நான் அகத்தீசரை அடைந்து விட்டேன் எனக் கூறுவது ஒரு பாடல் (79). ஊடல் தீர்க்கவந்த பாணனை இகழ்ந்து பாடுவது ஒன்று (62).

தலைவன் கூற்றாக வருபவை ஐந்து பாடல்கள். ஐயுற்றுத் தெளிதல் ஒன்று (35) தலைவியைப் புகழ்தல் ஒன்று (28) தலைவியின் இயல் இது, இடம் இது எனப் பாங்கனிடம் கூறல் ஒன்று (15). உடன் போக்கின் போது ஊர்வந்து விட்டது என்று கூறல் ஒன்று (71). இரங்கல் ஒன்று (24).

தோழி கூற்றாக வருபவை இரண்டு. தலைவன் கொடுத்த தழையை ஏற்பித்தல் ஒன்று (17). உடன்போக்கு விலக்குதல் ஒன்று (54).

செவிலி தலைமகள் நிலைகண்டு இரங்கல் ஒன்று (18). தலைவியின் நிலைகண்டு இரங்கும் 55வது பாடல் செவிலி கூற்றா? நற்றாய் கூற்றா? தோழி கூற்றா என்பது புலப்படவில்லை இவையாவும் அகப்பொருள் தொடர்பானவை.

கீரையார் (39), மதங்கியார் (48), இடைச்சியார் (56), பிச்சியார் (74), வலைச்சியார் (77), கொற்றியார் (81) ஆகியவை ஒருதலைக் காமம் கொண்ட காமுகன் கூற்றாக வருபவை.

## யாப்பு

யாப்பில் சிறந்த புலமை படைத்த இந்நூல் ஆசிரியர் எல்லா யாப்பையும் பயன்படுத்தியுள்ளார். குறள் வெண்பா (42), சிந்தியல் வெண்பா (67), நேரிசை வெண்பா (காப்பு, 2,8,14,20,25,28,37,47,57,61,64,78,82,84,96) ஏழடிப் ப∴றொடை வெண்பா (53), சவலை வெண்பா (73), குறள் வெண் செந்துறை (31) ஆகிய வெண்பா வகைகளைப் பாடியுள்ள ஆசிரியர் திரிபங்கியாகவும் ஒரு நேரிசை வெண்பாவைப் பாடியுள்ளார் (90). திரிபங்கி என்பது சித்திரக் கவியின் ஒரு வகை. ஒரே வெண்பாவை இரண்டாவது சீரில் தொடங்கி மற்றொரு வெண்பாவாகவும், மூன்றாவது சீரில் தொடங்கி மற்றொரு வெண்பாகாவும் ஆக்கினாலும் பொருள் மாறாது தளை சிதையாமல் வருவது.

நேரிசை ஆசிரியப்பா (100), நிலைமண்டில ஆசிரியப்பா (36) (இதில் உயிர் வருக்க மோனையும் அமைத்துப் பாடியுள்ளார்) ஆகிய ஆசிரியப் பாக்களோடு அறுசீர் (4,18,21,39,48,62,68,69,91,95,99), எழுசீர் (6,12,19,30,40,74), எண்சீர் (5,16,22,41,52,56,59,66,71,75,81,83,86) பன்னிரு சீர் (15,24), பதினான்கு சீர்

(11,32,44,45,60,77), பதினாறு சீர் (26). விருத்தங்களையும் பாடியுள்ளார். இவற்றில் சந்த விருத்தம் இரண்டு, வண்ண விருத்தம் ஒன்று (7).

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா (1), கொச்சகக் கலிப்பா (50,93), தரவு கொச்சகக் கலிப்பா (96), கட்டளைக் கலிப்பா (43) கட்டளைக் கலித்துறை (3,9,17, 23,29,38,46,51,54,58,63,65,72,76,79) கலிநிலைத்துறை (33,98), விருத்தக் கலித்துறை (89), கலி விருத்தம் (13,49,55,70,80,87,94) ஆகிய கலிப்பாக்களையும் வஞ்சித்துறை (27,34), வஞ்சிவிருத்தம் (92), மருட்பாக்களையும் (35) பாடியுள்ளார். மருட்பா என்பது வெண்பாவில் தொடங்கி ஆசிரியப்பாவில் முடிவது. இதனைத் தலைவன் தலைவியைப் பார்த்து மருளும் இடத்து அமைத்திருப்பது ஆசிரியரின் புலமைக்குச் சான்று பகர்கிறது. இஃதன்றிப் பல பாடல்கள் மடக்காகவும் பாடியுள்ளார். மடக்குத் தாழிசையாக வருவது பத்தாவது பாடல்.

**அகத்தியருக்கும் அகத்தியான் பள்ளிக்கும் உள்ள தொடர்பு பற்றிய செய்திகள்**

தென்னாடு வந்த அகத்தியர் சிவபெருமானின் திருமணக்காட்சியைக் காண்பதற்காகத் தங்கி வழிபட்ட இடங்களாகப் பல இடங்கள் சொல்லப்படுகின்றன. எனினும் அவர் வழிப்பட்ட இடம் அகத்தியான் பள்ளிதான் என்பதற்கு நூலிலேயே பல இடங்கள் அகச் சான்றாக அமைந்துள்ளன. காப்பு 1,2,6,21,37,39,43,10 ஆகிய செய்யுட்கள் இச்செய்தியைக் கூறுகின்றன.

முதல் பாட்டில் வேதாரண்யத்திலிருந்து 24 நிமிடம் நடக்கக்கூடிய தூரத்தில் அகத்தியர் வழிபட்ட இடம் இருப்பது குறிப்பிடப்படுகின்றது. 33வது பாடல் வேதாரண்ய இறைவி வீணாவாத விதூஷிணியையும், அகத்தியர் மறைக்காடு வந்தமையையும் குறிப்பிடுகிறது. 29 ஆம் பாடலில் அகத்தியான் பள்ளி இறைவி பாகம்பிரியாள் குறிப்பிடப்படுகின்றாள்.

அகத்தியான் பள்ளி இறைவன் அகத்தீசன், அகத்தீசர், அகத்தீசுரர், அகத்திபதியார், அகத்திபரர் என்று குறிப்பிடப்படுகிறார். அகத்தியான் பள்ளி, அகத்தி, அகத்தி நகர், அகத்தி மாநகர், அகத்திபதி என்று குறிப்பிடப்படுகிறது.

**சிவனின் பெருமைகள்**

'சிவன் மண்ணாகவும், விண்ணாகவும், காற்றாகவும், நெருப்பாகவும், நீராகவும் விளங்குபவன் ; திருமாலாலும், பிரம்மனாலும் அடிமுடி அறியப்படாதவன் ; உயிர்களையும், அறுசமயத்தையும் தோற்றுவித்தவன்; காலமாகிய வாரம், மாதம், வருடம், திதி,

And wore its hide on His person divine
Set ablaze the ***Tiripuram***[2] with derisive laughter His
Even as He bent ***Mēru*** as a bow.
The hands same did willingly receive,
The *Piṭṭu*[3] offered by a devoted old woman.
As the hired worker of that woman weak
Whose steps faltered as she walked
The shoulder of the Lord did carry sand in baskets
And dumped it in ***Vaikai***[4] to contain the flood there
The shoulders did chop the lustful youth evil
Who desired to molest his ***Kuru*'s** wife
They did carry the young **Pāṇṭiyan**[5] handsome
To proclaim to the world that he was the rightful heir royal,
They did cleave a tiger fiery eyed,
And peel its hide to wear around His waist,
They plucked one of **Piraman's** heads.
And as well handled *Ālakālam*
Which emergd as a seaborne evil grievous
For the world entire
They sold bangles in the streets,
To the spouses of the saints of *Tārukāvanam*[6]
And also put the bangles to those women,
The shoulders did wear ***Koṉṟai*** garland,
Of fragrant blossoms honeyed and tender leaves
They did snatch the life of **Yamaṉ**[7]
Who encountered with all his might,
They sold costly gems ninefold at **Maturai** streets
They did become cool indeed

On seeing the saliva sweet which overflowed
The mouth of the beloved infant **Murukan**

1. **Akattiyan** - A legendary sage of short stature, who performed many miracles.
2. *Tiripuram* - Three formidable metal forts of three demons were destroyed by **Lord Civan.**
3. *Pittu* - a sweet dish made of rice flour. **Lord Civan** in one of this miracles performed at **Maturai** carried sand as a hired labourer for **Vanti** an old woman and ardent devotee of the Lord. He was even beaten by the **Pāṇṭiya** king for his laziness. The blow however fell on all at **Maturai** thereby revealing the true identity of the divine labourer who worked merely for the sake of the *Pittu* offered by **Vanti** whose devotion to **Civan** was deep.
4. *Vaikai* - The river which flows at **Maturai.**
5. **Pāṇṭiyan** - The reference is to **Ukkirakumara Pāṇṭiyan** known also as ***Valuti*** who is supposed to be the incarnation of **Murukan**. Hence he was carried by the Lord on His shoulders.
6. *Tārukāvanam* - a legendairy forest where saints lived with their spouses.
7. Yaman - the God of death in Hinduism.

## 8. நேரிசை வெண்பா

புயங்கமணி புண்ணியனைப் பொற்கொன்றைப் பூமே
லியங்குமகத் தீசனையே யேத்தாய்–மயங்க
வருத்துதல்செய் வன்மனதே வஞ்சநெஞ்ச மாத
ரருத்தியிலங் காழாமற் றான்.

மயங்கும்படி வருத்தத்தைச் செய்கின்ற கொடிய மனமே! வஞ்ச மனத்தையுடைய பெண்களின் ஆசையிலே நீ மூழ்காமல் (இருப்பதற்காக), புயங்கம் என்னும் நூலை அணிந்த புண்ணியனாகிய பொன் போன்ற கொன்றைப் பூவை அணிந்த அகத்தீசனைப் போற்றிப் புகழ்ந்து வணங்குவாயாக.

புயங்கம் – புஜங்கம் என்ற இலக்கிய வகை. அருத்தி – ஆசை. அருத்தியில் + அங்கு + ஆழாமல் + தான்.

Oh! evil mind, the root cause of my illusions grievous,
In order to dispel thy desire overwhelming,
For wenches luring and deceitful
Hail and worship **Lord Akattīcaṉ,**
**The *Puyaṅkam*** [1] clad Lord of Virtne.
Ensconed in *Koṉṟai* flowers golden

1. ***Puyaṅkam*** - a literary genre, a metaphorical garb in this context.

### 9. கட்டளைக் கலித்துறை

தானந் தவங்க ளநேகஞ்செய் தேகைலை சார்ந்திடிலெ
னீனந் தவாததொர் பாதாளத் தீதுவிட் டெய்திடலென்
னானந் தநாதனை நான்முகன் மாற்றேவர் நாயகனை
யானந் தனையகத் தீசனைச் சேர்ந்த வடியனெற்கே.

ஆனந்த நாதனும், பிரமன், திருமால், தேவர்கள் அனைவர்க்கும் தலைவனும் ஆகிய அகத்தீசரைச் சார்ந்த எனக்குத் தானம், தவம் செய்து கைலை சென்றால் என்ன? இழிவு தவிராத நரகத்தில் வீழ்ந்தாலென்ன? (இரண்டும் ஒன்று தான் எதைப் பற்றியும் கவலையில்லை என்று பொருள்).

ஈனம் - இழிவு. தவாத - குறையாத, மால் + தேவர் - மாற்றேவர்.

As I depend solely on **Akattīcaṉ**
The Lord of Ecstasy divine,
And the leader of **Tirumāl, Piramaṉ** and heavenly folk all
It matters little,
Whether I attain the bliss of Kayilai lofty
Through penance or charity,
Or wallow in hell foul
Which is never free from disgrace evil.

## 10. அம்மானை

அம்மானை என்பது காய்கள் கொண்டு பெண்கள் விளையாடும் ஓர் ஆட்டம் ஆகும். ஆடும் போது ஒருத்தி ஒரு கருத்து கூற, அடுத்தவள் ஒரு வினா கேட்க, அடுத்தவள் விடை சொல்வது வழக்கம்.

**மடக்குத் தாழிசை**

அடியனேற் கருள்புரியு மன்பரகத் தீசனார்
படிமிசையோ பழிக்குமுனம் பயந்தனர்கா ணம்மானை
படிமிசையோ பழிக்குமுனம் பயந்தனரே யாமாகில்
விடனொருவன் அங்கமதை வெட்டியதேன் அம்மானை
வெட்டியது மவனதுதீ வினையலவோ வம்மானை.

எனக்கு அருள்புரியும் அன்பராகிய அகத்தீசனார் பழிக்கு அஞ்சுபவர் (என்று ஒருத்தி கூற,) பழிக்கு அஞ்சுபவர் ஆனால் கெட்டவன் ஒருவனின் உடலை வெட்டியது ஏன்? (என்று அடுத்தவள் வினவிஇ மற்றொருத்தி) வெட்டியது அவனுடைய தீவினை (என்கிறாள்).

படி – பூமி, உலகம். விடன் – தீயவன். அங்கம் – உடல்.

## *Ammāṉai*

*Ammāṉai* is a game of dice played by women whose banter and dialogue enliven the game. *Ammāṉai* also became a genre in Tamil poetry in the form of searching queries and suitable answers relevant to the contents of the poetic work or piece. The term *Ammāṉai* wil be used in questions and answers as well.

**Lord Akattīcar** who shower His grace.
On my humble self.
Gives no room for slanderous accusation, ***Ammāṉai***.
If he doth fear any worldly allegation such,
Why did He chop the limb of the youth lustful? ***Ammāṉai***

It was the misdeed vicious of the youth
That chopped him - ***Ammāṉai.***

## 11. இரங்கல்

(தலைமகனது பிரிவாற்றாது வருந்துகின்ற தலைமகளது துன்பம் நோக்கிய நற்றாய் கூறியது)

### பதினான்கு சீர் விருத்தம்

மானை யேந்தின ரின்னு மென்மட மானை யேந்தெழி லோடுறார்
மாலை தந்தொடை மார்ப ணிந்தவர் மாலை தந்திலர் புலியுரித்
தானை கொண்டவர் தயலொ டென்மக டானை கொண்ட தளிக்கிலார்
தைய லுக்கொரு பங்க ளித்தவர் தைய லுக்குறு துயரடார்
மீனை யாழி பிடித்த வர்வட மீனை யொத்தவள் கரந்தொடார்
வேலை யேழு மழைத்த வர்நிசி வேலை நீக்கிலர் கன்னல்கல்
லானை தின்ன வளித்த வர்முலை யானை தின்னவு மன்பிலா
ரணிய கத்தியர் செய்யு நீதிய நீதி யாக விருந்ததே.

கையில் மானை ஏந்தியவர் என் மான் போன்ற மகளின் அழகையும் ஏந்திச் சென்று விட்டார். என் மகள் அளித்த மாலையை அணிந்தவர் என் மகளுக்கு மாலை தந்திலர். புலியை உரித்து ஆனையையும் உரித்தவர் என் மகள் அழகை எடுத்துக் கொண்டு இன்று அளிக்கவில்லை. (காக்கவில்லை, கொடுக்கவில்லை.) தையலாகிய (பெண்) உமைக்கு இடப்பாகம் கொடுத்தவர் என் தையலின் துன்பத்தை நினைக்கவில்லை. கடலில் மீன் பிடித்தவர் வடமீனை யொத்த என் மகள் கையைப் பிடிக்கவில்லை. வேலை (கடல்) ஏழையும் அழைத்தவர் என் மகளின் இரவு வேலையை (துன்பத்தை) நீக்கவில்லை. கல்யானைக்குக் கரும்பூட்டியவர் என் மகள் மார்பாகிய யானையை உண்ண அன்பில்லாதவராகிவிட்டார். அகத்தியான் பள்ளி இறைவனின் நீதி அநீதியாக உள்ளது.

**மீன் பிடித்தமை**

சிவன் உமைக்கு வேதாகமங்களின் பொருளை உபதேசிக்க அவள் விருப்பமின்றிக் கேட்டாள். கோபம் கொண்ட சிவன் உமையை மீனவப் பெண்ணாகப் பிறக்கும்படி சபித்தார்.

இதைப் பார்த்த விநாயகரும் முருகரும் இந்நூல்களால்தான் இக்கதி ஏற்பட்டது என அவற்றைக் கடலில் வீசினர். சிவன், தானும், உமையும் தனிமையில் இருக்கும் போது பிள்ளைகள் இருவரையும் உள்ளே விட்டதால் நந்தியைச் சினந்து பெரிய மீனாகும்படிச் சபித்தார். இச்சாபங்களின்படி மீனவத் தலைவனிடம் உமை குழந்தையாக அகப்பட்டு வளர்ந்தாள். அவள் மணப்பருவம் அடைந்த போது நந்தி மகர மீனாக வந்து பரதவர் ஓடங்களைக் கவிழ்த்துத் துன்புறுத்தினார். யாராலும் அம்மகரத்தைப் பிடிக்க முடியவில்லை. மகரத்தைப் பிடித்தவர்க்குப் பெண் கொடுப்பேன் எனப் பரதவர் தலைவன் அறிவிக்கச் சிவன் பரதவன் வேடம் கொண்டு மகரத்தைப் பிடித்து நூல்களை மீட்டு உமையை மணந்தார். இறுதியில் பரதவர் தலைவன் தன்னிடம் வளர்ந்தவள் உமை என்றும், மீனவன் சிவன் என்றும் அறிகிறான். (திருவிளையாடற் புராணம் படலம் 57.)

**எழு கடல் அழைத்தமை**

மலயத்துவச பாண்டியனுக்கும், காஞ்சன மாலைக்கும் மகளாகப் பிறந்த உமையைச் சிவன் சோமசுந்தரராக வந்து திருமணம் செய்து கொண்டார். கடலில் குளிப்பது புண்ணியம் எனக் கௌதம முனிவர் கூறியதால் காஞ்சனமாலை கடல் நீராடி வருவதாக மகளிடம் சொன்னாள். தாயின் பிரிவைத் தாங்க இயலாத மகள் கணவனிடம் கடலை அழைக்கும்படி வேண்டினாள். சிவன் "ஒரு கடலென்ன? ஏழு கடலையும் அழைக்கிறேன்." என எழு கடலையும் அழைத்தார். (திருவிளையாடற் புராணம் படலம் 9.)

**கல்யானைக்குக் கரும்பூட்டியமை**

மதுரையை ஆண்ட அபிஷேக பாண்டியனுக்கு அருள் புரிவதற்காகச் சிவபெருமான் ஒரு சித்திராக வந்து பல அற்புதங்கள் செய்தார். மன்னன் "அவரை அழைத்து வரும்படிக் கூறி, பின் அவரை நாம் அழைக்கலாமா? நாமே சென்று காண வேண்டும்" என்று கருதிக் கோயிலுக்குச் சென்றான். கோயிலில் அமர்ந்திருந்த சித்தரை அறியாத அமைச்சர்கள் அவரை வெளியேறும்படி கூறினார்கள். அவர் "நானே சித்தன்" என்று கூற, அங்கிருந்த கல்லால் ஆன யானையைக் காட்டி, அப்படியானால் இந்தக் கல்யானையைக் கரும்புண்ணச் செய்யுங்கள் என்றனர். கல்லால் ஆன யானை உயிர் பெற்று பாக்குமரம் போன்ற பெரிய கரும்பை உண்டது. சித்தர் மறைந்தார். அரசன் 'சித்தர் இறைவனே' என உணர்ந்து பணிந்து அருள் பெற்றான். (திருவிளையாடற் புராணம் படலம் 21.)

**தையல்** – பெண். **ஆழி** – கடல். **வடமீன்** – அருந்ததி, **வேலை** – கடல், துன்பம். **கன்னல்** – கரும்பு.

## Plight of the heroine who pines for the attention of the Lord who is indifferent - The foster mother's complaint

He who doth carry a deer in His hand,
Has not taken for Himself the beauty of my daughter doelike
He hath sported the garland given by her
But hath not garlanded her in return
He who did peel the tiger and the elephant
Hath not returned or requited
The beauuty of my dauughter dedicated to Him
He who doth accomodate **Umai** on a part
Of His person divine,
Has scant concern for my daughter's pangs
He who did vigorously fish in the ocean deep.
Hath not touched
My daughter's hand **Aruntati**[1] like
He who did summon the seas seven so deep
Hath little realized,
The depth of my daughter's grief noctunal
He who did feed the stone elephant with sugarcane
Would not take in His mouth and taste
My daughter's breasts elephantine
It is but injustice sheer,
On the part of the Lord of **Akattiyāṉpaḷḷi**

1. **Aruntati** was the wife of Sage **Vaciṣṭar** and became a star by virtue of her Chastity. It is customary in Hindu Marriage to make the bride look at the star in a symbolic gesture of chastity.

## 12. எழுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்

இருபுவியி லுறுமனித ரெதிரெருமை கடவியுயி
　　ரெளிதில்கவர் கருவி யமனோ
டொருதிரண மதிவலியொ டுழலுமெம படருமொரு
　　வுருசிறிது கொளும சகமே
மருகமல மலரதனில் வதியுமெழு தயனுமவர்
　　வடியளவி லமையு நமர்காள்
திருபொதிய மலையதனு டிகழ்குருமு னிபரவுமோர்
　　திருநகருள் பரமர் துணையே.

மணம் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் எழுத்துப்படி பிறப்பெடுத்த மனிதர்களே! இப்புவியில் வாழும் உங்கள் எதிரிலே எருமை மேலேறி உயிரைப் பறிப்பேன் எனக் கருவும் எமனும், மன உறுதி படைத்து வருத்தும் எமகிங்கரர்களும் வரும்போது, பொதிய மலை முனிவராகிய அகத்தியர் பூசை செய்த அகத்தியான் பள்ளி இறைவனை உங்களுக்குத் துணையாகக் கொண்டால் அவர்கள் கொசுக்களைப் போல் அற்பமாகி விடுவர்.

கடவி – செலுத்தி (வாகனமாகச் செலுத்தி). **எமபடர்** – எமதூதுவர். **மசகம்** – கொசு.

Oh! folk! born in this world,
As per the writ destined by **Piraman** lotus borne,
When **Yaman** doth arrive astride his buffalo mount,
Along with his retinue of ***Yamapaṭar***[1] tough and tormenting,
To wrest your lives with resolve ruthless.
If you seek refuge and succour divine
From the Lord of **Akattiyāṉpaḷḷi**
Whom saint **Akattiyāṉ** did worship,
Those dealers of death all,
Will become mosquitoes mean and powerless.

*Yamapaṭar* – The assistants of **Yamaṉ** the god of death or ***Kiṅkarar.***

## 13. இரங்கல்

(தலைவி தான்படும் துயரத்தைத் தோழியரிடம் கூறுதல்)

### கலி விருத்தம்

துணையெ னக்கெனத் தோன்றிய தோகையீ
ரணையெ னப்பல பூக்கள டுக்கிலெ
னிணையி லாவகத் தீசற்கு யான்மதன்
கணைக ளாற்படுங் கட்டஞ்சொ லாமலே.

எனக்குத் துணையான மயில் போன்ற தோழிகளே! மன்மதன் அம்புகளால் நான் படும் துன்பத்தை இணையற்றவராகிய அகத்தியான் பள்ளி ஈசற்குச் சொல்லாமல், பல பூக்களை அணை போல் அடுக்கி என்ன பயன்?

**மதன்** - மன்மதன். **கணை** - அம்பு. **கட்டம்** - துன்பம்.

### The heroine expresses her pangs of love to her companions

Oh! my dear pals peahen like,
What is the use of piling flowers
Like a dam veritable,
Without informing the Lord of **Akattiyānpaḷḷi**
Of my pangs of love,
Caused by **Manmatan**'s[1] shafts?

1. **Manmatan** - The God of Love who wields a sugarcane bow and flowery arrows to make people lovelorn.

## 14. மேக விடு தூது

(காதல் கொண்ட ஒரு பெண் மேகத்தைத் தலைவனிடத்தில் தூது விடுதல்)

### நேரிசை வெண்பா

சொல்லுவீ ரும்மைத் தொழுதேன் றரவுபோ
யல்லன்மாய்த் தாளகத்தி யத்தற்கே – மெல்லக்

குரவையினீர் மொண்டு கருக்கொண்டெழு கொண்டல்கா
ளிரவினில்யா னேற்பதிசைத் தே.

கடலில் நீர் மொண்டு கருக்கொண்டு (கருமைநிறம் கொண்டு) எழும் மேகங்களே! உங்களைத் தொழுகின்றேன். துன்பம் நீக்குகின்ற பாதங்களையுடைய அகத்தியான் பள்ளி இறைவனிடம் தூது போய் நான் இரப்பதைச் சொல்வீராக.

துரவு – தூது. குரவை – கடல். கொண்டல் – மேகம்.

## Clouds sent as messengers by a lovelorn girl

Oh! clouds dark that emerge,
Impregnated with the water of the seas,
I bow before thee in all humility
Do please convey to the Lord of **Akattiyāṉpaḷḷi**
Whose feet dispel miseries all,
Of what I beg of Him fervently.

## 15. இயலிடங் கூறலென்னுந்துறை

(தெய்வப் புணர்ச்சியின் இறுதியில் தலைமகளது அடைதற்கரிய தன்மையை நினைந்து வருந்துகின்ற தலைமகனை யெதிர்ப்பட்டு உற்ற துரைக்கக் கேட்ட பாங்கன், "நின்னாற் காணப்பட்ட வடிவுக்கு இயலையுமிடத்தையுங் கூறுவாய்" என்று சொல்ல அவனுக்குத் தலைமகன் தான் கண்ட மகளின் 'இயல் இது ; இடம் இது' என்று கூறுவது.)

### பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

இசைத்திடும் போதம் மாதி னிருண்டமொய் குழலோ மேக
மிருங்கடல் குடித்த வண்ண மென்வண்ண மற்று மின்ன
லசைத்திடு வண்ண மாகு மாயிழை யிடையன் னாட
னாகமோ வாட கத்தி லார்வண்ண மாகு மைக்கண்
தசைத்தமீன் கயல்போ லொக்குந் தகுதியா ளகத்தி நாதன்
றங்குநற் பதியின் மேய தருக்களாற் சூழ்ந்தா காய
மிசைத்தளி ருடைத்த காவின் மிகுந்தவோர் வஞ்சி யன்னாள்
மிளிரிய லிடந்தான் விரிந்தவென் னெஞ்ச தாமே.

அகத்தீசுவரர் வாழும் அகத்தியான் பள்ளியில், தளிர்கள் வானைத் தொடும் மரங்கள் சூழ்ந்த சோலையில் உள்ள பெண்ணின், இருள் போன்ற அடர்ந்த கூந்தலின் நிறம் கடல் குடித்த மேகத்தின் நிறம். இடை மின்னலைப் போன்று உள்ளது. உடலின் நிறமோ பொன்னின் நிறமாகும். மையிட்ட கண்ணோ கயல் மீனைப் போன்று உள்ளது. இவை அவளது இயல். அவள் இருக்குமிடமோ விரிந்த என் நெஞ்சம்.

**மொய்குழல்** – அடர்ந்த கூந்தல். **ஆடகம்** – பொன். தரு – மரம். கா – சோலை. **அன்னாள் +தன் +ஆகம்** – அன்னாடன்னாகம் – அப்படிப்பட்டவளின் உடல்.

## The hero tells his friend of the heroine's salient features and sojourn

Her tresses dark and dense
Are but clouds laden with the water of the seas,
Her waist is a flash of lightring for sure,
The hue of her body beautiful
Is that of gold pure and fine,
Her eyes lined and lovely
Look like *Kayal* fishes indeed
The lass seen thus at **Akattiyā<u>n</u>pa<u>ḷḷ</u>i**
Where trees with tender leaves touch the skies
Did however sojourn at my heart.

### 16. எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

நெஞ்சு கறுத்தானு மஞ்சை யறுத்தானு
நீற்றை யுடைத்தானு மேற்றை யெடுத்தானும்
குஞ்சி சிவந்தானு நஞ்சை யுகந்தானும்
குமரனுக் கம்மானு மமரருக் கெம்மானும்
வஞ்சி யிடத்தானுங் கஞ்சி யுடைத்தானு
மதியை முடித்தானு நதியை யெடுத்தானு
முஞ்சலை யுய்த்தானும் விஞ்சலைத் துய்த்தானு
முகத்த லடைத்தானு மகத்தி யிடத்தானே.

அகத்தி நகர் வாழும் அகத்தீசர் நெஞ்சு கறுத்தவர். ஐம்புலனை அடக்கியவர். திருநீற்றை யணிந்தவர். ஏருதைக் கொடியாக உயர்த்தியவர். சிவந்த சடையை யுடையவர். நஞ்சை விரும்பியவர். குமரனாகிய முருகனுக்குத் தந்தை. தேவர்க்குத் தலைவர். வஞ்சிக்கொடி போன்ற உமையை இடப்பாகத்தில் உடையவர். காஞ்சிபுரத்தையுடையவர். சந்திரனைத் தலையில் முடித்தவர். கங்கையைத் தலையில் ஏந்தியவர். நான் ஊஞ்சலாடும் பொழுது என்னை ஆட்டிவிட்டவர். என்னிடம் இன்பம் துய்த்தவர். தற்பொழுது வராமல் இன்பத்தைத் தடுப்பவரும் அவரே.

கறுத்தானும் + அஞ்சை + அறுத்தானும். **அஞ்சு** – ஐம்புலன். **நீறு** – திருநீறு. **ஏறு** – காளை. **குஞ்சி** – சடை. **நஞ்சு** – விடம். **குமரன்** – முருகன். **அமரர்** – தேவர். **வஞ்சி** – உமை. **கஞ்சி** – காஞ்சிபுரம். **மதி** – சந்திரன். **நதி** – கங்கை. **உஞ்சல்** – ஊசல். **விஞ்சல்** – உயர்வு (இன்பம்). **உகத்தல்** – மகிழ்ச்சி.

My Lord, who doth reside at **Akatti**
Hath a neck blackened, (by venom deadly)
Doth smear ***Tirunīṟu***[1] on His person all over,
As His Flag He hath a bull divine.
His locks are red and He did relish poison
Father He is for **Murukaṉ** ever youthful,
And leader of all folk immortal in heaven.
He who doth accomodate His consort dear
On the left of His person divine
Has chosen to reside at **Kāñci**[2] as well,
He wears the moon on His forehead
And contains the swelling **Kaṅkai** in His locks matted,
When I did oscillate in a swing,
He did push it up and down
He did enjoy me body and soul
It is that Lord of all attributes such

Who doth deny happiness to me
By His absence now

1. *Tiruniṟu* – Sacred ash worn by **Civa<u>n</u>** and his devotees.

2. **Kāñci** – A temple town considered sacred by both **Caivites** and **Vaishnavites.**

## 17. தழை யேற்பித்த லென்னுந் துறை

(அதாவது இத்தழையை வாங்கிக் கொண்டு, என் குறையை முடித்தருள்வீரா மென்று வேண்டிக்கையுறையாகத் தலைவன் கொடுத்த தழையை, அருமையாக ஏற்றுக் கொண்ட தோழி, தலைமகளிடஞ் சென்று, அவள் குறிப்பை யறிந்து, "இத்தழை நமக்கெளிய தொன்றன்று; இதனை நீ ஏற்றுக்கொள்வாயாக" வெனத் தழையை வியந்துரைப்பது.)

### கட்டளைக் கலித்துறை

இடமா யகத்தி யரனின்றி லங்கு மெழினகிரிற்
றிடமாய் வசிக்கு மயிலேயுன் குங்குமச் சேறணிந்த
தடமா முலைக்கு மிடவே யளித்த தழையிதுகற்
கடமாவிற் கிட்ட கரும்பன்று வாய்ந்தது காணிதுவே.

"சிவன் தனக்குரிய இடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கின்ற ஊராகிய அகத்தியான் பள்ளியில் வாழும் மயில் போன்ற தலைவியே! உன் குங்குமம் அணிந்த பெரிய கொங்கை மேல் அணிவதற்காகத் தலைவன் அளித்த இத்தழை கல்யானைக்குக் கொடுத்த கரும்பல்ல; அதனினும் உயர்ந்தது." (இதை ஏற்றுக் கொள் என்பது குறிப்பு)

**அரன்** – சிவன். **அகத்தி** – அகத்தியான் பள்ளி. **கடமா** – யானை. (கல்யானைக்குக் கரும்பூட்டிய திருவிளையாடல் இங்கும் கூறப்பட்டது)

### *Ta<u>l</u>ai* (sprig) sent as a token of love from the hero to the heroine and plea for its acceptance

Oh! ***Ta<u>l</u>aivi***[1] pretty as a peahen.
Thou dost reside at **Akattiyā<u>n</u>paḷḷi**
The abode favourite of **Civa<u>n</u>**'s choice.

Do please accept this *tal̲ai* (spring)
Sent by the *talaivan*[2] to adorn,
Thy huge breast vermilion smeared,
This ***tal̲ai*** is indeed more precious
Than even the sugar cane sweet,
Offered to the stone elephant[3] by the Lord

1.*Tal̲aivi* - the heroine

2.*Tal̲aivan̲* - the hero. This concept is based on the tradition of ancient **Caṅkam** poetry.

3. One of the miracles performed by **Civan̲** disguised as a *Cittar* (ascetic) when challenged at **Maturai** to prove His cittus or miracles. He fed a stone elephant with sugarcane and made it eat the cane.

### 18. இரங்கல்

(தலைமகளது துயரம் நோக்கிச் செவிலி இரங்கியுரைத்தது)

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

வேர்த்திடுமெய் வெய்துயிர்க்கு மேதினியில் வீழுமழும் விழிநீர் சோரும்
பார்த்திடுமுள் பரிதவிக்கும் பாரினிலுட் காருமிசை பாடு மோடு
மார்த்திடுமை யோவெனும கத்தீசுரர் மாலை யழகாய் வாங்கிச்
சேர்த்திடுமென் சேடியர்கா ளெனுமிளகித் தியங்கிடுமித் தெய்வ மாதே.

தெய்வத் தன்மை பொருந்திய இப்பெண், உடல் வியர்ப்பாள்; பெரு மூச்சு விடுவாள்; தரையில் விழுவாள்; அழுவாள்; விழிநீர் சொரிவாள்; பார்ப்பாள்; பரிதவிப்பாள்; தரையில் அமர்வாள்; இசைபாடுவாள்; ஓடுவாள்; ஆரவாரம் செய்வாள்; ஐயோ என்பாள்; அகத்தீசர் மாலையை அழகாக வாங்கி வாருங்கள் என் தோழியரே என்பாள்; உருகி மயங்கிடுவாள்.

**வெய்துயிர்க்கும்** - பெருமூச்சு விடுவாள். **சேடியர்** - தோழியர்.

### The foster mother's sympathetic concern for the plight of the heroine and her pangs of love

See the plight of this damsel divine,
She sweats all over and sighs
Falls on the ground and weeps
Sheds teass copious and sees around
Suffers in distress acute and sits on the floor
Sings music melodions and runs too at times
Clamours a lot and crie's *Aiyō*[1]
'Get me the garland of **Akattīcar**
Oh! my friends dear', she exclaims
Thus doth she melt and remain spell bound

1. *Aiyō* - an exclamation of despair

### 19. தவம்

(தவம் செய்பவரைப் பார்த்து அத்தவத்தால் பயனில்லை யெனல்)

**எழுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்**

மாதவ மியற்றியிரு மாநில மடுத்தகவை
மாமலை யிடத்துமுழன் மதியோரே
யோதன முயற்றுமென வூசிமு னையுற்றுமென
வூமரி னடித்துமென வுகமிதோ
வேதனை படத்திரியின் வேனென விணுங்கமென
வீனில்கு கையுற்றுமென வினைபோமோ
காதலொ டகத்தியிறை காலிலடை வுற்றுமும
காயமது சுற்றுபழி கழிவீரே.

இவ்வுலகில் பிறந்து ஆயுள் முழுவதும் மலையில் கிடந்து தவமியற்றி வருந்தும், அறிவுடையோரே! உணவின்றி இருக்கிறோம்; ஊசி முனையில் நிற்கிறோம்; ஊமை போல்

நடிக்கிறோம்; திரியின் சுடர் போல் வானம் செல்வோம்; குகையில் அடங்கியுள்ளோம் என வேதனைப்பட்டால் வினை போகுமோ? அன்போடு வந்து அகத்தீசர் காலில் அடைவுற்று உமது உடலைச் சுற்றும் பழியைக் களைவீராக!

அகவை – ஆயுள்; வாழ்நாள். **உழல்** – வருந்தும். **ஓதனம்** – உணவு. **ஊமர்** – ஊமை. **காயம்** – உடல். **விண்நுங்கம்** – விண்ணுலகடைவோம்.

## Penance

(Addressing those who perform penance to tell them that their penance is of no avail)

Oh! sages born in this world
Who strain life-long at mountains in penance stoic,
You may declare with pride,
That you forego thy food and starve
And stand on a needletop in balance perfect,
You may pretend dumbness acute
And confine yourselves to caves cramped,
You may claim movement skywards
Like the flame of a wick wide,
All these tricks of which you are adept
Will not dispel *Viṉai*[1] thine,
Unless you seek refuge
At the feet of **Lord Akattīcar**
And get rid of the sinful impact of thy deeds
That haunts bodies thine
Hence do seek the Lord's feet.

1. *Viṉai* - the impact of one's deeds past or present in this world. The term indicates both good or bad deeds. Here it refers to vices.

## 20. நேரிசை வெண்பா

கழிநிலமு மத்தமுமே கங்கிலுள தான
வெழிலகத்தி மாநகர்வா ழீசா – வழிவின்
மறைமுதலே நின்றனிரு மாமலர்த்தாள் கண்டென்
குறைதீர்வ தென்றெனவே கூறு.

"நெய்தல் நிலமும் ஊமத்தம் பூவுமே ஓரத்தில் உடைய அழகு நிறைந்த அகத்தியான் பள்ளி வாழும் இறைவனே! அழிவற்ற வேத முதல்வனே! உன் இரு மலரடிகளைக் கண்டு என் குறை தீர்வது எப்போது என்று சொல்."

**கழி நிலம்** – நெய்தல் நிலம். வாழ் +ஈசா +அழிவு +இல். **மறைமுதல்** – வேத முதல்வனே.

Oh! Lord Resindent of **Akattiyānpaḷḷi**
The city beautiful bounded by just a region coastal
With *Ūmattai*[1] flowers only,
Oh! Prime Lord of scriptures all,
Do tell me when I can see,
The pair divine of Thy flowery feet
And get my grievances redressed

1. *Ūmattai* - a toxic plant known as **datura** with tubeshaped flowers.

## நாரை விடு தூது

(நாரையைத் தூதாக விடுத்தல்)

## 21. அறுசீர் ஆசிரிய விருத்தம்

கூறுவீ ரெம்மை வேண்டிக் குளக்கரை நாரை காணீர்
கீறுகொ ளிந்து மாரக் கிரியினின் றெழும்பி மிக்க
வூறுசெய் தென்றற் காற்று மொவ்விய விடயந் தன்னை
யாறுசேர் சடையார் நந்த மகத்தியான் பள்ளி யற்கே.

குளக்கரையிலுள்ள நாரைகளே! நீங்கள் எனக்காக வேண்டி, கங்கையணிந்த சடையை உடைய அகத்தியான் பள்ளி இறைவனிடம் சென்று, கீற்றாக வரும் சந்திரனும், அம்மலையிலிருந்து கிளம்பி வரும் தென்றலும் எனக்குத் துன்பம் தருகின்ற செய்தியைக் கூறுவீராக.

**இந்து** – சந்திரன். **நாரைகாள் +நீர்** – நாரைகாணீர். **கிரி** – மலை. **ஊறு** – துன்பம். **விடயம்** – செய்தி. **கீறு** – கீற்று. **ஆறு** – கங்கை.

Oh! storks on the tankbunds,
Do please for my sake,
Go to the Lord of **Akattiyāṉpaḷḷi**
Who doth hold **Kaṅkai** in His locks matted.
And convey to Him the acute misery mine,
Caused by the moon that ariseth as a beam bright
And the breeze that blows from the mountains yonder.

## 22. இரங்கல்

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

கேசவனுங் கிரியுருவ மெடுத்துங் காணாக்
கிளர்பதத்தோ னகத்திநகர் தன்னில் வாழு
மீசனவ னெற்கிதழித் தாரின் றீந்தா
லிளமகளி ரிங்குநின்று வம்பு பேசார்
வாசமுள சந்தனமுந் தனத்திற் சேரும்
வார்கடலி னொலிக்குமிவண் மயக்கங் கொள்ளேன்
வீசுவட காற்றிற்கு நோகேன் மையன்
மேனோக்கா திரவுமிக நீண்டி டாதே.

திருமாலும் காண முடியாத பாதத்தையுடையவனும், மலையுருவம் எடுத்தவனும், ஆகிய அகத்தியான் பள்ளி ஈசன் எனக்கு அவனுடைய கொன்றை மாலையைத் தந்தானாகில் இளம்

பெண்கள் (என்னைப் பற்றி) வம்பு பேச மாட்டார்கள். என் மார்புக்குச் சந்தனம் பூசப்படும். கடலொலிகேட்டு மயங்க மாட்டேன்; வடக்கேயிருந்து வீசும் வாடைக் காற்றுக்கும் வருந்த மாட்டேன். இரவும் நீளாது. துன்பமும் மிகாது. (மாலை தராததால் தலைவி சந்தனம் பூசாமல் கடலொலிக்கு மயங்கி, வாடைக் காற்றுக்கும், இரவுக்கும் வருந்தி உடல் மெலிவுற்றிருப்பதால் ஊர் மகளிர் வம்பு பேசுகின்றனர். இவை நீங்க வேண்டுமானால் இறைவன் தலைவியை ஏற்க வேண்டும் என்பது கருத்து).

**கேசவன்** – திருமால். **கிரி** – மலை. **இதழி** – கொன்றை. **தார்** – மாலை.

If the Lord of **Akattiyāṉpaḷḷi**
Who did assume a mountain's shape,
And whose feet divine **Kēcavaṉ** could not find,
Gives me His ***Koṉṟai*** garland,
Women young won't gossip,
Sandalpaste will adorn my breasts for sure
Never shall I feel as under a spell
On listening to the rumbling of the seas
Nor shall I be hurt by the *Vāṭai*[1] wind chill
Which blows from the morth
Nights won't be painfully long
As they are now due to the Lord's indifference.

1. *Vāṭai* – The north wind which is chill and biting.

## 23. கட்டளைக் கலித்துறை

நீண்டவ னைச்சிவ னாக்கிய வன்பணி நீலமிடற்
றாண்டவ னையகத் தீசனைப் பையர வாபரணம்
பூண்டவ னையிரு மாமுனி கண்டவண் போற்றிச்செய்
தாண்டவ னைத்தின மேத்தக்கை லையிடந் தந்திடுமே.

நெடியவனாகிய திருமாலைச் சிவனாக்கி அவனால் வணங்கப்படும் நீலநிறம் பொருந்திய கழுத்தையுடையவனை, அகத்தீசனை, நச்சுப் பையை யுடைய பாம்பை ஆபரணமாக அணிந்தவனை, பதஞ்சலி, வியாக்கிரபாதர் என்னும் இரு முனிவராலும் வணங்கப்படும் நடராசப் பெருமானை, தினமும் வணங்கினால் கயிலையில் இடம் கிடைக்கும்.

**நீண்டவன்** – திருமால். **பையரவு** – நச்சுப்பையையுடைய நல்ல பாம்பு.

If we worship daily,
**Akatticaṉ** who did convert **Tirumāl**
As the blue throated **Civaṉ**'s worshipper **Caivite**
And who doth sport a snake with a venomous pouch
As an ornament veritable,
And who as a Dancer Divine[1] and cosmic
Was worshipped by two saints[2] great and holy,
If we worship the Lord such
We are sure to get a berth eternal
In **Kayilai** quite accomodative.

1. Dancer Divine (*Tāṇṭavaṉ*) – Lord **Naṭarājā** of **Citamparam**.
2. Two Saints – **Patañcali** and **Viyākrapātā**, the worshippers of Lord **Naṭarājā** .

## 24. இரங்கல்

(தலைவனைப் பிரிந்துறைகின்ற நெய்தல் நிலத்துத் தலைமகள், அங்குள்ள பொருள்களை நோக்கி தான் படும் வருத்தங் கூறி இரங்கியது)

மடக்கு

(வந்த தொடரே மீண்டும் வந்து வேறு வேறு பொருள் தருவது)

### பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

மேக மளாவி யடங்கலையே வேளுக் காவி யடங்கலையே
வேலையிற் சரக்கோ மலைபடவே விழிய சரக்கோ மலைபடவே

மாகம் வரக்காண் கரும்பனையே மாலை வரக்காண் கரும்பனையே
மரங்க டழைத்திடு மஞ்சரமே மயிலைய ழைத்திடு மஞ்சரமே
மோக வனங்கொளு மோதிமமே மோக வனங்கொளு மோதிமமே
முத்த ரெனப்பட் டசைகதமே மூளு மனற்பட் டசைகதமே
சாகரத் தேயுள வம்பேரே சடலத் தேயுள வம்பேரே
தாமரை யகத்தீ சாரங்கமே தருவீ ரகத்தீ சாரங்கமே.

மேகங்கள் சூழ்ந்தவை அடங்கவில்லை. என் காமத்துக்கு இன்னும் உயிர் போகவில்லை. கடல்படு பொருள்கள் மலைக்கு வந்து விட்டன. சூரியன் கண்துயில மலைக்குச் சென்று விட்டான். கரிய பனைகள் ஆகாயம் வரை தெரிகின்றன. மாலையில் மன்மதனும் வந்து விட்டான். வறண்ட நிலத்தில் மரங்கள் தழைத்து விட்டன. மேகக் கூட்டங்கள் மயிலை அழைக்கின்றன. அன்னங்கள் அன்னத்தைச் சேர்கின்றன. கவரிமான்கள் (துணைதேடி) வனத்தை அடைகின்றன. கடற்கரை மணல்கள் முத்துப் போல் ஒளிர்கின்றன. காமவெப்பத்தால் சினம் எழுகிறது. கடலின் தண்ணீர் அழகாக உள்ளது. உடலின் வாசனையும் அழகாக உள்ளது. தாமரை மலர் போன்ற என் மென்மையான உள்ளத்தில் ஏற்படும் வெப்பம் உடலையும் சுடுகிறது. அகத்தீசுரரே என் நிறத்தைக் கொடுப்பீராக. (புணர்ச்சியைக் கொடு எனினும் ஆம்)

**வேள்** – விருப்பம். **ஆவி** – உயிர். சரக்கு – பொருள். விழி + அசர + கோ. மாகம் – ஆகாயம். **கரும்** (மை) + **பனை** – கரியபனை. **கரும்பனை** – கரும்புவில்லுடைய மன்மதனை. தழைத்திடும் + அம் + சுரம். அழைத்திடும் + மஞ்ச + உரம். மோக + அனம். மோக + வனம். **ஓதிமம்** – அன்னம். கவரிமான். **சைகதம்** – மணல். **அசை + கதம்** – கோபம் எழுதல். **சாகரம்** – கடல். **அம்பு** – நீர். **சடலம்** – உடல். **அம்பு** – வாசனை. ஏர் – அழகு. அகத்தீ + சார் + அங்கம். தருவீர் + அகத்தீச + ரங்கம். ரங்கம் – நிறம்.

## The heroine *(Talaivi)* of a coastal *(neytal)* region complains to the components of that region of her pangs of separation from the hero *(Talaivan)*

The gathered clouds have not yet cleared,
My desire lustful has not yet subsided,
The seaborne goods, have reached the mountian,

The sun with eyes weary
Has gone to sleep behind the mountain,
Black palms tall are seen to scrape the skies,
**Ma<u>n</u>mata<u>n</u>** too has arrived to indicate the evening
Trees have flourished in arid lands,
Clouds invite peacocks but temptingly,
Swans mate with partners theirs proper,
And *Kavaṅ*[1] deer seek in jungles their own mates,
The sands of the seashore glitter like pearls,
Lustful heat doth generate fury indeed,
Water in the sea is simply beautiful
Bodily fragrance is equally elegant
The heat of passion which torments my tendermind lotuslike
Doth hurt my body as well
Oh! **Lord Akattīca!** give me back my hue proper
And grant me too the supreme pleasure of Thy union sexual

1. *Kavaṅ* - a kind of deer supposed to be so sensitive as would die even if a single hair is plucked from its body

### 25. நேரிசை வெண்பா

சாரங்க பாணிக்குச் சக்கரமீந் தோய்கொன்றைத்
தாரங்க மீதிற் றரித்தோயே – பாரங்க
மோங்கத்தென் பால்வடக்கு முட்காரக் கும்பசனைத்
தாங்கவனுப் பித்தோய் சரண்.

வில்லையுடைய திருமாலுக்குச் சக்கரப்படையை அளித்தவனே! கொன்றை மாலையை உடலில் தரித்தவனே! பூமியின் தென்பகுதி உயர்ந்து வடபகுதி தாழ அதனைச் சமன் செய்ய அகத்தியரைத் தென் திசைக்கு அனுப்பியவனே! நான் உன் அடைக்கலம்.

**சாரங்கம்** – வில். **பாணி** – கை. **சாரங்கபாணி** – வில்லேந்திய கையையுடையவன். பெருமாளுக்கு பஞ்சாயுதம் உண்டு. அவை சங்கு, சக்கரம், வாள், வில், கதை ஆகியவை தார் + அங்கம். **தார்** – மாலை. **அங்கம்** – உடல். **பாரங்கம்** – பூமியின் பகுதி. **கும்பசன்** – கும்பமுனி – கும்பத்தில் தோன்றியவர், அகத்தியர். "மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன்" என்னும் திருப்பல்லாண்டுத் தொடர் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது (திருப்பல்லாண்டு பாடல் – 9)

Oh! Lord who did provide a wheel divine
To the bowwielding **Cāraṅkapāṇi**[1]
And who doth wear a ***Koṉṟai*** garland on his person holy
Oh ! Lord who did send **Akattīyar**[2]
To balance the risen hemisphere of the south
With the lowered part morthern,
I seek refuge Thine in total surrender.

1. **Cāraṅkapāṇi** - a manifestation of **Tirumāl** as a wielder of a bow. **Cāraṅkam** means a bow. There is **Cāraṅkapāṇi** temple at **Kumpakōṇam** a town in **Tañcāvūr** district.

2. **Akattīyar** - When once the southern hemisphere of the earth rose steeply resulting in the descent of the northern part, **Lord Civaṉ** sent **Akattīyar** to the south. When that midget saint of mighty penance landed there, the sourthern part came down on a par with the north. The balance of the earth was thus restored.

## 26. களி

(கள்ளுண்டு களித்தவன் பாடுவது)

### பதினாறு சீர்க் கழிநெடிலடி ஆசிரியச் சந்த விருந்தம்

சரண டைந்தே யகத்திய நாதனுந்
தங்கி யேதொழு தேத்தும் பதிக்குளே
சார்ந்த வன்புகழ் பேசித் தருக்களைத்
தாள மோடுரைத் தாடு மடியரே

மரண டைந்திடு மந்தப் பதிக்குளே
யாடு கின்ற பெருத்த களியரே
மாய்ந்து பார்க்கிற் குருக்களுக் கேநிக
ராகு மேபனை யேனெனி லப்பனை
பரண டைந்து தினமு முயன்றிடிற்
பலமு முண்டதி லுள்ள நலத்தையும்
பார்த்த பேரறி வார்களல் லாமலும்
பலவ கைப்படு நூலெழு தப்படு
முரண டைந்ததோ ரேடுமுண் டாலது
மோக்க வீடுந் தருந்திற முள்ளதே
முனையெழுத் தாணி யாலெழு தாதவோர்
மொய்கொண் மந்திரம் பாளையுட் கொண்டதே.

அகத்தியர் சரணடைந்து (பூசை செய்து) வாழும் அகத்தியான் பள்ளியில், அகத்தீசர் புகழைப் பேசி, இசைப்பாடல்களை ராகத்தோடு பாடி ஆடும் நாங்கள், காவல் நிறைந்த அவ்வூரில் கள்ளுண்டு ஆடும் கள்வெறியர் ஆவோம். ஆராய்ந்து பார்த்தால் பனைமரம் குருக்களுக்கு நிகராகும். எப்படியெனில் பனைமரத்தில் தினமும் ஏறிக் கள் இறக்கி உண்டால் உடல் வலிமை பெறும். பார்த்தவர் அதன் பெருமை அறிவர். குருக்கள் (முனிவர்) பர்ண சாலையில் இருந்து தினமும் முயன்று தவம் செய்தால் பயன் பெறுவர். பார்த்தவர் அவர் பெருமையறிவர். பலவகைநூலும் பனையேட்டில் எழுதப்படும். பெருமையுள்ள ஏடுகள் (நூல்கள்) மோட்சமும் தரும். பலவகை நூலும் முனிவர்களால் எழுதப்பெறும். அவற்றுள் சிறந்த நூல்கள் மோட்சமும் தரும். எழுத்தாணியால் எழுதப்படாத ஒரு மந்திரச சக்தி (மயக்கம் தரும் சக்தி) பாளையில் உள்ளது. எழுத்தாணியால் எழுதப்படாத மந்திர சக்தி முனிவர்களிடமும் உள்ளது.

**சரண்** – அடைக்கலம். **பதி** – ஊர். **அரண்** – காவல். **தரு** – இசைப்பாடல் வகையுள் ஒன்று. **பரண்** – மரத்திலமைக்கும் பரண், தவச்சாலை. **பலம்** – உடல்வலிமை, பயன். **முரண்** – பருமை. **மோக்கம்** – மோட்சம் – வீடு.

### Song of revelry by a toddyswiller

Frenzied drunkards are we at **Akattiyāṉpaḷḷi** seare,
Where we dance and sing with delight
Landatory verses set to music proper
Hailing the glory of **Akattīcar**
Worshipped by **Akattiyaṉ** at the shrine holy,
On an analysis by observation we can state,
That a palm tree is aventabe priest indeed,
If one climbs a palm tree every day
And swills the toddy tapped therein
His body will acquire strength for more.
Those who have witnessed exercise that
Are aware of its value beneficial
Saintly priests who perform penance austere
At *Parṇacālai*[1] thatched with palmfronds
Will also be rewarded for devotion theirs
Observers will vouch for that saintly effort as well .
Besides various works valuable and erudite
Will be written on palmleaves as manuscripts
Many such works of lasting value
Will guide the readers to bliss eternal
Saints will write works such on palm leaves
The best of which will ensure berths in heaven
There is a binding spell in the palm spathe
Which the stylus cannot provide in palm leaves
Saints too have a similar spell not coded in manuscripts such.

1. ***Parṇacālai*** - A cottage thatched with palmyra leaves or fronds. Saints reside in such cottages.

## 27. வஞ்சித் துறை

கொண்டுளங் குறுமுனி
தொண்டுசெய் தூயனைக்
கண்டுகால் வீழ்குவோ
ரண்டர்நா டாள்வரே.

குறுமுனியாகிய அகத்தியர் மனதிற் கொண்டு தொண்டு செய்யும் தூயவனைக் கண்டு காலில் வீழ்பவர் தேவர் நாடாகிய அமராவதியை ஆள்வர்.

**அண்டர்** – தேவர்.

Pious folk who fall at the feet
Of the perceived Lord Pristine
Whom **Akattīyar** did worship in devotion earnest
Will rule over **Amarāvati**[1] in heaven

1. **Amarāvati** – The land or the city of the Heavenly beings.

## 28. நேரிசை வெண்பா

ஆளும் பரம ரகத்தீசர் வாழ்பதியி
னாளும் வதியுமிந் நாயகியின் – றோளும்வேய்
பன்முத் ததரம் பவளங்கண் ணீலமுலை
கொன்மத்த கீசனிரு கொம்பு.

நம்மை ஆட்கொள்ளும் அகத்தீசர் வாழும் அகத்தியான் பள்ளியில் வசிக்கும் இத்தலைவியின் தோள் மூங்கில். பல் முத்து. உதடு பவளம். கண் நீலமலர். முலை கொல்லும் யானையின் இரு கொம்பு.

**வதியும்** – வசிக்கும் – வாழும். **வேய்** – மூங்கில். **அதரம்** – உதடு. **மத்தகீசன்** – மத்தகத்தையுடைய யானை.

The damsel who doth reside
At the place where **Akattīcar** the Prime Lord berign
Accommodates us under His aegis divine,
Hath shoulders bamboo like and pearly teeth
Coral lips and eyes blue as well
Her breasts are like the tusks both
Of a killer elephant indeed.

## 29. கட்டளைக் கலித்துறை

கொம்பொன் றுடையோனைக் குட்டிய வன்றொழு கோவையொரு
வம்பன் பொழிற்சூ ழகத்தி நகர்வா ழமலனைமற்
றெம்பன் னகப்பூ ணனைப்பாகம் **பேராள்** எழிற்பதியை
நம்பன் றனைத்துதி யன்பர்க்கென் னாளு நரகிலையே.

ஒற்றைக் கொம்பையுடைய விநாயகனைக் குட்டிய அகத்தியரால் வணங்கப்படும் தலைவன். சோலை சூழ்ந்த அகத்தியான் பள்ளியில் வாழும் குற்றமற்றவன். அவன் பாம்பை அணிகலனாக உடையவன். பாகம் பிரியாதவளாகிய உமையின் கணவன். அப்படிப்பட்ட சிவனைத் துதிக்கும் அன்பர்க்கு எந்நாளும் நரகம் இல்லை.

**பன்னகம்** – பாம்பு. **நம்பன்** – சிவன். **பாகம்பிரியாள்** – அகத்தியான் பள்ளி இறைவி உமை. அகத்தியர் காவிரியைக் குடத்தி லடைக்க, உலக நலம் கருதி விநாயகர் காக்கை வடிவம் எடுத்துக் கமண்டலத்தைத் தள்ளிக் காவிரியை விடுவிக்க, சினம் கொண்ட அகத்தியர் விநாயகரைத் துரத்தி அவர் தலையில் குட்டினார் என்பது புராணம். (அபிதான சிந்தாமணி ப–3).

The devotees who worship **Lord Civa<u>n</u>**
The Leader worshipped by **Akattīya<u>n</u>**
Who with his knuckles rapped **Vināyaka<u>n</u>**[1] singletusked,
The Lord flawless who doth reside

At **Akattiyāṉpaḷḷi** girdled by groves,
And who as well doth sport a snake
As an ornament on His self,
Besides being the consort of **Umai** inseparable
As a part of His person divine
Those who worship the Lord with attributes such
Will never go to hell.

1. **rapped Vināyakaṉ** – Saint **Akattīyar** got angry with **Vināyakaṉ** as the latter overturned the saint's bowl which contained **Kāvēri** water. Thus the pent up river was made to flow in **Tamilnāṭu.**

### 30. சம்பிரதம்
### (சித்து வேலை செய்தல்)
### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

ஏழ்நிலங் களையெடுத் திலகுசெண் டாடுவோ
மேழெழிலி யும்பி சைகுவோ
மிரவுபக லாகவும் பகலிரா வாகவுமொ
ரெளிதினி லியற்றி வைப்போ
மாழ்கடலை யேழையு மெடுத்துப் புசித்திடுவ
மாரெட்டு வரையைக் கரத்தி
லடக்கிவைப் போந்துங்க நீரையமு தாக்குவோ
மாகாய வாசி களையும்
வாழ்குகையு ளேவரச் செய்குவோங் கனலையும்
வாயினி லெடுத்த யிலுவோ
மன்னரையும் வலியநா ரிற்கட்டி விழிகணீர்
வழியவே செய்தி டுவமற்

றூழ்மறைய வுந்திசைகண் மாறவுஞ் செய்குவோ
மோதுமிவை வித்தை யலவா
லோருவந மகத்திநக ரீசனைப் போன்மற்றொ
ருருவமுங் காண்பிப் பமே.

ஏழுலகங்களைக் கையில் எடுத்துப் பந்து விளையாடுவோம். ஏழு மேகங்களையும் பிசைவோம். இரவைப் பகலாக்குவோம். பகலை இரவாக்குவோம். ஆழமான கடல்கள் ஏழையும் எடுத்து உண்போம். எட்டு மலையைக் கையில் அடக்கி வைப்போம். நல்ல நீரை அமுதமாக்குவோம். ஆகாய வாசிகளையும் குகையினுள் வரச் சொல்லுவோம். நெருப்பை வாயில் எடுத்து உண்போம். மன்னரை வலிய நாரினால் கட்டி விழிகளில் நீர் வழியச் செய்வோம். ஊழ்வலி மறையவும் திசைகள் மாறவும் செய்குவோம். சொன்ன இவை கூட வித்தைகள் இல்லை. எல்லாவற்றுக்கும் மேலே அகத்தீசரைப் போல் மற்றோர் உருவம் காண்பிப்போம். (ஏழு நிலத்தைக் களையெடுத்து வீதி சமைப்போம்; கடலையை உண்போம்; எள்ளையும், துவரையையும் கையில் அடக்குவோம் ; கரும்பை வாயிலிட்டு மெல்லுவோம்; நரை மயிரை நாரில் கட்டி இழுத்துக் கண்ணில் நீர்வரச் செய்வோம் என்ற பொருளும் உண்டு).

**செண்டு**– பந்து, வீதி, **எழிலி** – மேகம். **வரை** – மலை. **துங்க** – உயர்ந்த. **கனல்** – நெருப்பு. **அயிலுவோம்** – உண்போம். **ஏழுலகம்** – பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், தபோலோகம், மகாலோகம், சனலோகம், சத்தியலோகம் இவை மேல் ஏழுலோகங்கள். அதலம், விதலம், சுதலம், தராதலம, ரசாதலம், மகாதலம், பாதலம் இவை கீழ் ஏழுலோகங்கள். **ஏழுமேகம்** – ஆவர்த்தம், சம்வர்த்தம், புட்கலா வர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம். **ஏழுகடல்** – உவர்நீர்க்கடல், நன்னீர்க்டல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன் கடல் ஆகியவை. **எட்டுவரை** – இமயம், ஏமகூடம். கந்தமாதனம் கயிலை, நிடதம், நீலகிரி, மந்தரம், விந்தம். **கனல்** – கன்னல் – கரும்பு. **எட்டுவரை**– எட்டு +வரை, எள் + துவரை.

## *Campiratam*
## (Declaration of impossible feats)

We will take the worlds seven[1] in our hands
And play with them as balls,
We will knead the clouds seven[2] in the skies,

We will convert nights into days and days into nights
Drink we will the seas seven[3] so deep
And confine the mountains eight[4] in our hands for sure,
We'll make ambrosia sweet out of water pure and simple,
We will drive the heavenly folk to dwell in caves,
We'll hold fire in mouths ours and eat it too
And bind monarchs with ropes stout and make them shed tears
Change we will the destiny's course
And rearrange as well the directions all,
Even all these are not real feats
As we can project another **Akattīcar** so illusory,
As to pass for the real Lord Himself.

1. **The seven worlds** are **Pūlōkam, Puvarlōkam, Cuvarlōkam, Tapōlōkam, Mahālōkam, Canalōkam** and **Cattiyalōkam** of the upper strata. **Atalam, Vitalam, Cutalam, Tarātalam, Racātalam, Mahātalam** and **Pātāḷam** are the lower seven worlds.
2. **The seven clouds** are **Āvarttam, Camvarttam, Puṭkalavarttam, Caṅkārittam, Turōṇam, Kāḷamuki** and **Nīlavarunam.**
3. **The seven seas** are, **Uvarnīrkkaṭal, Nannīrkkaṭal, Pāṟkaṭal, Tayirkkaṭal, Neykkaṭal, Karuppañcāṟṟukkaṭal** and **Tēnkaṭal.**
4. **Eight mountains are Imayam, Ēmakūṭam, Kantamātaṉam, Kayilai, Niṭatam, Nīlakiri, Mantaram.**

## 31. குறள் வெண்செந்துறை

மேலக முளவோ விலகத் தீசன்
காலக மேகொள் கன்னியர் கட்கே.

(அகத்தீசர் கால் அகமே கொள் கன்னியர்கட்டு மேலக முளவோ இல்.)

அகத்தீசர் கால்களை அகத்தில் கொள்ளும் கன்னியர்களுக்கு இதற்கு மேலான வீடு எதுவும் உளதோ? இல்லை.

Is there any *Vītu*[1] else of bliss eternal
For the maidens who harbour
**Akattīcar** in minds theirs? None indeed

### 32. தாய்க்கூற்று

### பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்

கட்செவிக ளாபரண மடுபுலித் தோலாடை
கரியுரிப் போர்வை வெள்ளைக்
காளைவா கனமோர்சுடு காடிடம் பூசுவது
காடுடை யசுட லைப்பொடி
நட்பலகை நாயகனோர் நத்தன்மைத் துனனழகு
நாரிவரை யரையன் மகளாம்
நால்வாய் முகத்தனுமோ ராறுதலை யீராறு
நாட்டமுள னும்பு தல்வராம்
பெட்புமரு மகள்வள்ளி தெய்வானை மேருப்
பிறங்கல் விற்கூ லாயுதம்
பேசுதற் கரியமழு மான்கரத் தேந்தியொரு
பிறையுடைச் சடையு டையவன்
கொட்புலவு மடவிகொ ளகத்திநகர் தன்னில்வாழ்
குமரியே யுன்ற னுக்குக்
கோலனாய் வருவனோ வவனாசை நீமிகக்
கொள்ளு வதுவே வீணாகுமே.

காடு நிறைந்த அகத்திநகர் வாழும் குமரியே! நீ விரும்பும் சிவனுக்குப் பாம்புகள் ஆபரணங்கள், கொல்லும் தொழிலையுடைய புலியினது தோல் ஆடை. யானையின் உரி போர்வை. வெள்ளைக் காளை வாகனம். சுடுகாடு வாழிடம். அவன் பூசுவது, சுடுகாட்டுச் சாம்பல். நட்பு பேய்களின் தலைவன். இருண்ட நிறமுடைய திருமால் மைத்துனன். மலையரையன் மகள் மனைவி. தொங்குகின்ற துதிக்கையையுடைய யானை முகத்தனும், ஆறு

தலையும், பன்னிரு கண்ணுடையவனும் புதல்வர்கள். வள்ளி, தெய்வயானை மருமகள்கள். மேருமலை வில். ஆயுதம், சூலாயுதம். கையில் ஏந்தியிருப்பவை மழுவும், மானும். பிறையைச் சடையில் உடையவன். இப்படிப்பட்ட அகத்தீசன் உனக்காக மணக்கோலம் கொண்டு வருவானோ? அவன்மீது நீ ஆசை கொள்வது வீணான செயலாகும்.

**கட்செவி** – கண்ணையே செவியாக உடையது, பாம்பு. **கரி** – யானை. **அலகை** – பேய். **நத்தன்** – இருள் போன்றவன். **நாரி** – பெண். **வரை** – மலை. **நால்வாய்** – தொங்கும் வாய். துதிக்கை. **நாட்டம்** – கண். **பெட்பு** – விரும்புத்தக்க. **பிறங்கல்** – மலை. **கொட்புலவு** – சுழன்று திரியும். **அடவி** – காடு.

## A mother's caution

Oh! Damsel of **Akattīnakar** covered by forests dense,
**Lord Civa<u>n</u>** of whom Thou art so enamoured
Doth sport snakes as ornaments His
His garment is but the skin of a cruel tiger predatory
A peeled elephant hide is His shawl
His mount is but a bull white,
The cremation ground is His abode of choice,
He doth smear the ash from the burning ghat
On His person all over,
His friend is but the devil's chief dark,
The dark hued **Tirumāl** is His wife's brother,
His consort is the daughter of the king of mountains,
The elephant headed **Vināyaka<u>n</u>** with a trunk to boot
And the six faced dozeneyed **Muruka<u>n</u>** are His sons indeed,
**Vaḷḷi** and **Teyvayā<u>n</u>ai**[1] are His daughters-in-law,
**Mount *Mēru***[2] is His bow veritable,
His weapon is the trident sharp,
He doth hold a deer and an axe in His hand,
He wears the crescent moon on His locks matted,
Do you expect the Lord such

To arrive as a bridegroom proper to wed thee?
It is a vain desire on thy part,
Thou art only hoping against hope.

1. **Va!!i and Teyvayāṉai** – The spouses of Lord Murukaṉ.
2. **Mount *Mēru*** – A legendary mountain.

### 33. கலிநிலைத்துறை

**வீணா வாத விதூஷணி** யம்பிகை மேவுமறை
பேணா வூர்மண வாளரை யேகாண் பேர்முனிவன்
காணா நின்றவ கத்திந கர்வாழ் கடவுள்கழற்
பூணா நின்றவ ரேபுன் னரகிற் போகாரே.

வீணா வாத விதூஷணி என்று பெயர் படைத்த உமையம்மையுடன் உறைகின்ற திருமறைக்காட்டிறைவனைக் காணவந்த முனிவர்களும் கண்ட அகத்திநகர் வாழும் கடவுள் பாதங்களைத் தலைமேல் பூண்டவர் நரகத்தை அடையமாட்டார்.

The saints who arrived at **Maṟaikkāṭu** hallowed,
To see the Lord who doth reside there with **Vīnāvātavitūṣaṇi**[1]
Did see and worship the Lord resident
Of **Akattīnatar** as well
Hence those who hold on their heads
The feet of **Akattīcar** in reverence pious
Will never wallow in hell.

1. **Vīnāvātavitūṣaṇi** - The goddess at **Maṟaikkāṭu** or **Vetāraṇyam.**

### 34. வஞ்சித்துறை

காரார் கடிபொழி
லோரா ரிறைமுனி
யூரா ருறுநர
கோரா ருறுதியே.

மேகம் வந்து தங்கும் மணம் பொருந்திய சோலை சூழ்ந்த, அழகு பொருந்திய, அகத்தியர் பெயரால் அமைந்த ஊரில் உள்ளவர்கள் நரகத்தை அடையமாட்டார்கள். இது உறுதி.

கார் – மேகம். கடி – மணம். **பொழில்** – சோலை. ஏர் – அழகு. **ஆர்** – நிறைந்த. இறை முனி – அகத்தியர். **ஊரார்** + உறு + நரகு + ஒரார். **ஒரார்** – அடையமாட்டார்.

Those who reside at the place lovely
Named after the midget saint **Akattīyar**
Where clouds sojourn and fragrant groves surround
Will never go to hell for sure.

## 35. கைக்கிளை

(கைக்கிளை – ஒரு தலைக் காமம்)

மருட்பா

மருட்பா – செய்யுள் வகையுள் ஒன்று. முதலில் வெண்பாவில் தொடங்கி ஆசிரியப்பாவில் முடிவது. இங்கு தலைவன் மருளுவதற்கு மருட்பாவையே ஆசிரியர் பயன்படுத்தியிருப்பது நோக்கத்தக்கது.

உறுகாலு மேதினியி லூன்றியது பூவி
லறுகாலு மொய்த்ததா லஞ்சேற்–சிறுகாலு
நெஞ்சே யகத்தி நெறிநகர்
மஞ்சே நிகர்தலை மாதணங் கலளே.

கால் பூமியில் படுகிறது. இவள் அணிந்திருக்கும் பூவில் வண்டு மொய்க்கின்றது. ஆகையால் அகத்தி நகர் வாழும் மேகம் போலும் கூந்தலுடைய இப்பெண் தெய்வப் பெண் அல்லள். பூமியிலுள்ள மானிடப் பெண்ணே. ஆகவே நெஞ்சே! சிறிதும் அஞ்சாதே.

(இது தலைவன் தலைவியைக் கண்டு இவள் தெய்வப் பெண்ணோ மானிடப் பெண்ணோ என ஐயுற்றுத் தெளிந்தது. அகப்பொருட் கோவைகளில் தலைவியைத் தலைவன் காணுதல், ஐயுறுதல், தெளிதல், ஆகியவை தலைவன் பக்கல் மட்டுமே நிகழ்வதாதலால் கைக்கிளையில் அடங்கும்)

மேதினி – பூமி. அறுகால் – ஆறுகால்களையுடைய வண்டு. மஞ்சு – மேகம். அஞ்சேல் + சிறுகாலும் – சிறிதும் அஞ்சாதே.

## *Kaikkiḷai* – one sided love or lust

### *Maruṭpā*

*Maruṭpā* is a poem which begins as a *Veṇpā* and ends as an *Aciriyappā* in its metrical pattern.

Here this song is indicating the confusion and doubt of the *Talaivaṉ*[1] regarding the human identity of the *Talaivi*[2] and to the subsequent clearance of his doubts.]

Her feet touch the earth
Beetles swarm around the flowers she wears
Hence this damsel with tresses couldlike
Who doth reside at **Akattinakar**
Is indeed a woman earthly
And not an apparition divine.

1. *Talaivaṉ* – hero as per the concept of Caṅkam poetry.
2. *Talaivi* – heroine as per the concept of Caṅkam poetry.

### 36. நிலை மண்டில ஆசிரியப்பா

#### உயிர்வருக்க மோனை

அணங்கிடப் பாகத் திணங்கிய வருளை
ஆவி யனைத்தினு மேவிய பொருளை
இடப மேலிருந் தடல்கொளு மாதியை
ஈசனா யெங்குந் தேசுகொள் சோதியை
உலகழி நாளினு மிலகுறு விளக்கை
ஊனமோர் காலுந் தானிலாச் சரக்கை

என்பா பரணத் தன்புகொண் மூர்த்தியை
ஏகமா யுருபம நேகமாங் கீர்த்தியை
ஐந்தக் கரத்தி லுந்திய தேவை
ஒடிவிலா மறையின் முடியமர் கோவை
ஓரகத் தீசர் சீர்நகர்க் கடவுளை
ஔவிய மிலாத்துதி செய்யிது திடனே.

உலா தேவியை இடப்பாகத்தில் கொண்டு விளங்கும் அருள் வடிவானவனை, உயிர்கள் அனைத்திலும் பொருந்தி விளங்கும் பொருளை, எருதின் மேலிருக்கும் வலிமை பொருந்திய மூலப்பொருளை, ஈசனாய் எங்கும் அழகு பொருந்தி விளங்கும் சோதியை, உலகம் அழியும் நாளிலும் இலங்கும் விளக்கை, ஒரு காலும் குறைவில்லாப் பொருளை, எலும்பை ஆபரணமாக அணியும் அன்புருவான மூர்த்தியை, ஒருருவாயும் பலவுருவாயும் விளங்கும் புகழ் மிக்கவனை, சிவாய நம வென்னும் திருவைந்தெழுத்தில் விளங்கும் தேவனை, குறைவில் வேதத்தின் உச்சியில் அமர்ந்த இறைவனை, அகத்தீசர் நகர்க் (அகத்தியான் பள்ளி) கடவுளைப் பொறாமையில்லாமல் துதி செய்வாயாக.

**அணங்கு** – உமையம்மை. **இடபம்** – ரிஷபம். எருது. **அடல்** – வலிமை, **தேசு** – வலிமை, அழகு, **ஊனம்** – குறை. **என்பு** – எலும்பு. **ஔவியம்** – பொறாமை.

Do worship without any inhibition envious
**Lord Akattīcar** of **Akattīnakar** glorious
Who as grace divine personified
Hath held **Umai** on His left,
Who doth exist but properly in forms of life all.
The Prime one mighty astride a bull,
The Light lovely as Lord Omnipresent,
The Lamp which is eternal and burns
Even on the day of the world's extinction
The object perfect sans blemish,
The Lord who loves to sport bones as ornaments,

The famed God in a shape single
And in shapes manifold too,
He who is contained in the sacred letters five[1]
The Lord seated at the crest of scriptures flawless,
Do worship the glorious Lord such.

1. The five sacred letters are நமசிவாய (**Na Ma Ci Vā Ya**) according to the worshippers of **Lord Civan̲**.

## 37. நேரிசை வெண்பா

திடமுண் டெனவிண்ணோர் சேரமருந் துண்ண
விடமுண்டு காத்த மிடறோ—னிடமுண்ட
வம்பிகையோ டாரகத்தி யான்பள்ளி காணுமவர்க்
கிம்பருல கின்னலென்று மில்.

இறப்பின்றி இருப்பதற்காகத் தேவர்கள் அமுதுண்ண வேண்டி, நஞ்சையுண்டு காப்பாற்றிய கழுத்தையுடையவனும், இடப்பாகத்தில் அம்பிகையைக் கொண்டவனுமாகிய சிவன் வாழும் அகத்தியான் பள்ளியைத் தரிசிப்பவர்க்கு, இவ்வுலகில் துன்பமே இல்லை.

**திடம்** – அழியாமை. **விண்ணோர்** – தேவர். **மருந்து** – அமிர்தம். **மிடறு** – கழுத்து. **இம்பருலகு** – மண்ணுலகு. **இன்னல்** – துன்பம்.

For those who see at **Akattiyān̲paḷḷi**
The Lord who did consume venom deadly
To enable the heavenly folk to pastake amprosia
To attain immortality
And who did accommodate on His left.
Goddess **Umai.**
For those who see the Lord such
There will be no misery in this world of ours.

### 38. கட்டளைக் கலித்துறை

என்றுஞ் சிரம தகத்தீசர் தாளை யிறைஞ்சிடக்கா
தொன்றும் பிரம ரிசைகேட்க வாதிக் குறுபணிக
டுன்றுங் கரங்க ளியற்றிடப் புந்தி துதித்திடவே
பொன்றலி லங்கம் விழிகாண நாச்சீர் புகன்றிடவே.

அகத்தீசரை என்றும் வணங்கவே தலை. அவர் புகழைக் கேட்கவே காது. அவருக்குப் பணிகள் செய்திடவே கைகள். துதித்திடவே அறிவு. அழகு குறையாத அவருடைய உடலைக் காணவே விழிகள். அவர் புகழ் சொல்லவே நா.

சிரம் – தலை. **இறைஞ்ச** – வணங்க. **துன்றும்** – நெருங்கிய. **புந்தி** – அறிவு. **ஏர்** – அழகு. **பொன்றல்இல்** – குறையாத.

The head is there only to bow before **Akattīcar**
The ears are meant to listen to His glory alone,
Hands are there to offer Him service exclusive,
Intellect is there only to worship Him,
Eyes are there to behold
His body beautiful which never doth diminish
The tongue is there but to sing His praise.

### 39. கீரையார்

(கீரை விற்பவளிடம் கீரை வாங்குவது போல் பாடும் பாடல்)

#### அறுசீர் ஆசிரிய விருத்தம்

புகலடியார் வினைதவிர்க்கும் பொன்னகத்தி யான்பள்ளிப் புரியின் மேவு
மகல்வீதி தொறுங்கீரை கீரையென வறைந்துபகர்ந் தலையு மானே
பகருனது சொல்லேயென் னகமுருகப் பண்ணியதாற் பரிவோ டுன்கை
நகமவைகிள் ளியகீரை நயமேயா மவைமுழுது நான்கொள் வேனே.

தன்னிடம் வந்தவரின் தீ வினை நீக்கும் அகத்தியான் பள்ளியிலுள்ள அகன்ற வீதிகள் தோறும் கீரை கீரையெனக் கூவி விற்கும் பெண்ணே! உன்னுடைய சொல்லே என் உள்ளமுருகச் செய்தது. மேலும் உன் கை அன்போடு கிள்ளிய கீரைகள் மிகவும் விலைநயமாக உள்ளன. எனவே அவை முழுவதையும் நான் வாங்கிக் கொள்வேன்.

**அறைந்து பகர்ந்தலையும்** – கூவிக் கூவி விலை கூறித்திரியும். **நயம்** – விலை குறைவு.

Oh! Lass who hawks ***Kīrai***[1]
In the wide streets of **Akattiyāṉpaḷḷi**
Which doth dispel the ***Viṉai***[2] evil
Of the pilgrims and visitors there,
Thy voice hath melted me much indeed
And the green leaves plucked by fingernails thirne
Are so fine and cheap
That I have decided to buy the lot entire.

1. ***Kīrai*** – Greens or leaves and stems of a group of plants used in cooking as sidedishes.
2. ***Viṉai*** – The impact of the good or bad deeds of a person.

## 40. கார்

(தலைவனைப் பிரிந்த தலைவி கார்காலம் கண்டு வருந்திக் கூறுவது)

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வேளெரித் தவிழி யாளர் வாழுமொரு
வில்ல கத்திநகர் மயிலனீர்
நாளையே வருவ னென்று சொன்னவரிந்
நாளும் வல்லையினி யென்செய்வேன்
நீளதாம் புவிநி றைந்தி டச்சலதி
நீர்கு டித்துடல் கறுத்துவான்

காளமே கம்வில் வளைத்து மின்னியிடி
காண வந்தமழைக் காலமே.

மேகமானது கடலைக் குடித்து உடல் கருத்து, வில் வளைத்து, மின்னி, இடி இடித்து, பூமி நிறையும்படி மழை பெய்யும் கார் காலம் வந்து விட்டது. மன்மதனை எரித்த விழியையுடைய சிவன் வாழும் அகத்தி நகரில் உள்ள மயில் போன்ற பெண்களே! நாளையே வருவேன் என்று சொல்லிச் சென்ற தலைவர் இன்னும் வரவில்லை. என்ன செய்வேன்?

**வேள்** – மன்மதன். **சலதி** – கடல். **காளமேகம்** – கரியமேகம். **வல்லை** – வரவில்லை யென்பதன் மரூஉ.

Oh! Lovely lasses peahen like of **Akattiyāṉpaḷḷi**
Where the fiery eyed **Lord Civaṉ** who burnt[1] **Maṉmataṉ** doth reside,
The season of rains has arrived
When the cloud after drinking deep the sea
Becomes dark and arched like a bow
With flashes of lightning and thunder to boot
And is ready to pour so heavily
As to fill the earth entire,
My *Talaivaṉ* (Lord) who has, left
Promising to return on the morrow next
Has not yet arrived
Oh, what shall I do now?

1. **Burnt Maṉmataṉ** – Lord **Civaṉ** was disturbed in His penance by **Maṉmataṉ** the god of love. The enraged **Civaṉ** opened His third eye and burnt **Maṉmataṉ** to ashes.

## 41. எண்சீராசிரிய விருத்தம்

காரானை யுரித்தானைக் கதியீ வானைக்
கைதவர்தம் புரமெரியக் கண்டான் றன்னை
யோரானை முகத்தானை யுதவி னானை
யுததிவிட முண்டானை யுலகோ ரேத்துஞ்

சீரான மால்விடைமேற் றிகழ்வான் றன்னைத்
திருவகத்தி யான்பள்ளித் தேவைக் கொன்றைத்
தாரானை யன்பர்மனந் தங்கு வானைச்
சாராதார் பிறவாழிக் கரைகா ணாரே.

கரிய யானையை உரித்தவனும், மோட்சம் தருபவனும், அரக்கர்களின் முப்புரத்தை எரித்தவனும், ஆனைமுகனைப் பெற்றவனும், பாற்கடலில் தோன்றிய ஆலகாலவிடத்தை உண்டவனும், உலகம் போற்றும் சிறப்புப் பெற்றவனும், திருமாலாகிய ரிஷபத்தின் மேல் வீற்றிருப்பவனும், கொன்றை மாலை அணிந்தவனும், அன்பர் மனத்தில் தங்குபவனும் ஆகிய அகத்தியான் பள்ளி இறைவனை, அடையாதவர் பிறவிக் கடலின் கரையை அடையமாட்டார்.

**உததி** – கடல். இங்கு பாற்கடல். **விடை** – ரிஷபம். **தார்** – மாலை. **ஆழி** – கடல்.

Those who fail to seek
The Lord of **Akattiyāṉpaḷḷi**
Who did skin an elephant black,
Who doth grant state eternal,
Who did set ablaze the forts three
Of the demons formidable,
Who did beget the god elephant headed,
Who did consume the seaborne poison deadly,
Whose glory is hailed by the world entire.
Who is seated on **Māl** as his mount bull,
Who doth wear ***Koṉṟai*** garlands,
And who sojourns in the hearts
Of his devotees ardent,
Those who fail to seek the Lord such
Will never reach the shores
Of the oceans of birth vast and varied.

## 42. குறள் வெண்பா

காணகத் தீசன் கழற்கன்பு செய்மனனே
மாணகந் தான்மருவ வந்து.

மனமே! மாட்சியமைப்பட்ட மனம் பொருந்த (உள்ளன்புடன்) அகத்தீசன் பாதங்களுக்கு அன்பு செய்வாயாக.

**மாண்** – மாட்சிமைப்பட்ட. **அகம்** – மனம். **கழல்** – கழலணிந்த பாதம்.

Oh! Mind, do hold the ankleted feet
Of the Lord of **Akattiyāṉpaḷḷi**
In thy sincere devotion spontaneous and noble.

## 43. மடக்கு

### கட்டளைக்கலிப்பா

(நேரில் தொடங்கினால் அரையடிக்கு ஒற்று நீக்கிப் பதினோரு எழுத்துக்களும், நிரையில் தொடங்கினால் அரையடிக்கு ஒற்று நீக்கிப் பன்னிரண்டு எழுத்துக்களும் உடைய கலிப்பா)

மருங்கு மையற்கு மைமாத ரங்கமே
மாலய னறியார் நாத ரங்கமே
யொருங்கு சேர்பணி யென்பர வாமையே
யுழலு கின்றது மென்பர வாமையே
கரங்கு வார்சடை கண்டதுங் கங்கையே
கான யாரு மெடுத்துங் கங்கையே
யரங்கு மென்ற னகத்தியன் பள்ளியே
யமர்வ தைய னகத்தியன் பள்ளியே.

பக்கத்தில் சிவபெருமானுக்கு உமையுடைய உடலே உள்ளது. திருமாலாலும், பிரமனாலும் அறியப்படாததும் அச்சிவனின் உடலாகும். சிவனுடைய ஆபரணங்கள் எலும்பு, பாம்பு, ஆமை ஆகியவை. நான் துன்பப்படுவதும் அவனைத் துதிக்காத காரணத்தால் தான். சிவனுடைய சடையைக் கண்டது உண்டு கங்கையே. அவன் எல்லோரும் காண எடுத்தது உண்டு மேரு மலையையே. இறைவன் ஆடுகின்ற இடமும் என்னுடைய மனமே. விரும்பி அமர்வதும் அகத்தியான் பள்ளியே.

மருங்கும் + ஐயற்கு + உமை + மாதர் + அங்கம். மருங்கு + உமையற்கு + மைமா + தரங்கம். பக்கத்தில் உமையைக் கொண்ட சில பெருமானுக்கு யானையுரி போர்வையாகும் என்ற பொருளும் கொள்ளலாம். பணி - ஆபரணம். என்பு + அரவு + ஆமை. என்பு + எலும்பு. என் + பரவாமை - நான் வணங்காமை. கராங்கு - நெருங்கிய. கண்டதும் + கங்கை. எடுத்த + துங்கம் + கை.

A part integral of **Civa<u>n</u>**'s person
Is the body of **Umai** the damsel divine,
It was the selfsame Lord's person
Which **Māl** and **Aya<u>n</u>** could not comprehend,
Bones, snakes and turtles are but His ornaments
Suffer I do so much as I have failed to worship the Lord such,
It was **Kaṅkai** who did see and secure
A place in His locks matted,
It was He who held aloft in His hand
The **Mount Mēru** for all to see,
It is my ***Aka<u>m</u>***[1] where He doth dance as on a stage,
It is **Akattiyā<u>n</u>paḷḷi** which is the Lord's sojourn favourite.

***Aka<u>m</u>*** – one's mind. Here it is a stage for the Lord's dance.

## 44. மறம்

(மறவர் மகளை மணம் பேச வந்த தூதனிடம் மறவன்
தங்கள் வீரம் தோன்ற மறுத்துக் கூறுவது)

### பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்

ஏந்த ரூத வைவர் தூத ரிறையு டன்று திக்கவே
யின்பர் தூத ராம கத்தி யீச ரூரின் மறவர்யாம்
காந்து கால தூத ருங்க ரப்ப ரெங்கள் பேர்சொலிற்
கடுகி யச்ச மேயி லாது கழறி யோலை வைத்தனை
வேந்தர் தந்த திருமு கங்காண் வீர வென்று செப்பினை
விழிக ணெற்றி செவிகண் மூக்கு விரியும் வாய்பன் னாவிலை
கூந்த லைக்கி ழித்தெ றிந்து கூறு மரசு கொள்ளுமோர்
குலத்திற் கேற்ற வேம்பின் கொம்பைக் கூடிப் பேசு வோடியே.

மணமகனுடைய தூதனே! கிருஷ்ணனாகிய திருமாலால் துதிக்கப்பட்டவரும் சுந்தரருக்குத் தூதருமாகிய அகத்தீசரின் ஊராகிய அகத்தியான் பள்ளியில் வாழ்கின்ற மறவர்கள், நாங்கள். எங்களுடைய பெயரைச் சொன்னால் கொடுமை செய்கின்ற எமதூதரும் ஓடி மறைந்து கொள்வர். விரைந்து வந்து அச்சமே இல்லாமல் மணச் செய்தியைக் கூறி ஓலை வைத்தாய். வேந்தர் தந்த திருமுகம் (ஓலை) இது என்று சொன்னாய். இது திருமுகம் என்றால் விழிகள், நெற்றி, செவி, கண், மூக்கு, வாய், பல், நா ஆகியவை இல்லை. ஓலையைக் கிழிந்தெறிந்து விட்டு நீ கூறிய அரசனை ஏற்றுக்கொள்ளும் உன் குலத்திற்கு ஏற்ற ஒரு வேப்பங்கொம்பினைப் போய் மணம் பேசுவாயாக.

**ஏந்தல்** – அரசன். **காந்தல்** – கொடுமை செய்தல். **கரப்பர்** – ஒளிவர். **கடுகி** – விரைந்து. **கழறி** – வீரம் பேசி. **கூந்தல்** – கூந்தல் பனையாகிய ஓலை. **அரசு** – அரச மரம். அரசன்.

## *Maram*[1] (Bravery or Mettle)

A *Maravan*[2] rejects with contempt on offer of marriage to his daughter brought by the emissary of a king who does not belong to the *Marava* community.

Oh! emissary of the bridegroom,
We are ***maravar*** veritable
Who reside at the resort of **Akatticar**
Whom **Krisnan**[3] the **Pāntavar's**[4] emissary did worship
And who Himself was **Cuntarar's**[5] emissary once,
Even **Yaman's**[6] emissaries ruthless will run away
And hide themselves at the very mention of our names.
Thou did go over here sans fear
And delivered the ***ōlai***[7] with its message matrimonial,
You called that palmleaf a ***Tirumukam***[8]
Sent by thy king.
If it is a ***Tirumukam*** as claimed by thee
It does not contain eyes, ears forehead and nose
O the mouth, teeth and tongue thereof
Hence tear that ***ōlai*** to pieces
Go away and tell thy king
To seek as his bride a neempole
Which will suit him and his community too
As a choice proper.

1. ***Maram*** - In ancient Tamil ethos ***aram*** meant virtuous life and ***maram*** meant adventure and courageous acts .
2. A community in Tamilnātu noted for its valour and vigour in all activities.
3 &4. **Lord Krisnan** a manifestation of Visnu acted as an emissary of the five **Pāntavar's** to negotiate with the **Kauravars** in the epic ***Māhaparatam***.
5. Lord **Civan** acted as an emissary of **Cuntarar** to appease **Paravai Nācciyār.**
6. **Yaman** - God of death in Hinduism

7. *Ōlai* – Palmleaf manuscript
8. **Tirumukam** – an epistle or letter, It also means one's face.

## 45. இதுவும் அது (மறம்)

### பதினான்குசீர் விருத்தம்

ஓடி யோடி வந்த தூத ஒருவ கத்தி யீசர்த
    மூரி ருக்கு மறவ ரென்ற உண்மை கண்டு மதமரோ
நாடி நாரி யென்றனை நயத்த வில்லி லுண்டது
    நாவ லர்பாற் காரி கைகே ணஞ்செய் தன்னி லரிவையே
யாடி தன்னி லறிவை பாவை யடவி யுண்டு குமரியு
    மாடை தன்னி லுண்டு தையல மரும் வஞ்சி புதர்களிற்
கூடி யாரும் கோதை பூவிற் குன்றிலே யிளம்பிடி
    கூறு நங்கை காணு வாய்நீ கூர்வி னைமு கத்திலே.

ஓடி வந்த தூதனே! நாங்கள் அகத்தீசர் ஊரிலிருக்கும் மறவர் என்று அறிந்தும் செருக்குக் கொண்டு எங்களிடம் நாரி வேண்டும் (பெண்) என்றாய். வில்லில் உள்ளது நாரி (நாண்) போய் எடுத்துக் கொள். காரிகை (பெண்) வேண்டும் என்றாய். புலவரிடம் போய்க் கேள், அவர்களிடம் தான் காரிகை (யாப்பு நூல்) உள்ளது. அரிவை (பெண்) கேட்டாய், நஞ்செய் நிலத்தில் போய் நெல்லை அரிவாய். பாவை (பெண்) கேட்டாய். கண்ணாடியில் உண்டு பாவை (பிம்பம்) அறிவாய். குமரி கேட்டாய். காட்டில் உண்டு குமரி (தாவரம்). தையல் (பெண்) கேட்டாய். ஆடையில் உள்ளது தையல். போய் எடுத்துக் கொள். வஞ்சி (பெண்) கேட்டாய். புதர்களில் உண்டு போய்ப்பார். கோதை (பெண்) கேட்டாய். பூவிலுண்டு கோதை (மாலை). பிடி (பெண்யானை போன்ற பெண்) கேட்டாய். மலையில் உண்டு பிடி (பெண்யானை). நங்கை (பெண்) கேட்டாய். போர்க் களத்தில் பெறுவாயாக (வெற்றி).

மதம் – செருக்கு. அடவி – காடு, பெண்ணுக்குள்ள பெயர்களை யெல்லாம் கூறி, அப்பெயர்க்குரிய வேறு பொருளை வைத்துச் சிலேடை நயத்துடன் பாடப்பட்ட பாடல்.

Oh! emissary who came hither sprinting post haste,
Knowing full well that we are *maṟavars*
Who reside at the resort of **Akattīcar**
You sought in arrogance thine,
A ***nāri***[1] from among us,
The ***nāri*** you seek is there in a bow as well,
You wanted a ***Kārikai***[2] from our folk,
You can get a ***Kārikai*** from poets and scholars
Thou did ask for an ***arivai***[3] from our tribe,
Thou can perform ***arivai*** at wetlands indeed
You would have a ***Pāvai***[4] in our caste,
Thou can very well find a ***Pāvai*** in a mirror
You did demand a ***Kumari***[5] from us,
You will find a ***Kumari*** in a forest for sure,
Thou did seek a ***taiyal***[6] from us,
A ***taiyal*** you can find in a piece of cloth.
A ***Vañci***[7] from our folk thou did wish to have,
***Vañci*** is these among bushes thick,
You wanted a ***Kōtai***[8] from our clan,
***Kōtai*** can be had from flowers strung.,
Thou did ask for a ***Piṭi***[9]
***Piṭi*** will be found only in mountains
You did seek a ***Naṅkai***[10] from us
Fight for ***Naṅkai*** at a field of battle.

1. ***nāri*** – a bow string
2. ***Kārikai*** – a work on prosody in Tamil
3. ***Arivai*** – reap grain stalks.
4. ***Pāvai*** – a reflection in a mirror
5. ***Kumari*** – a wild plant
6. ***Taiyal*** – a stritch in a piecte of cloth
7. ***Vañci*** – a plant
8. ***Kōtai*** – garland of flowers

**9.** ***Piṭi*** – female elephant
**10.** *Naṅkai* – Victory in war. (All the ten words used here are common nouns meaning a girl).

## 46. கட்டளைக் கலித்துறை

வினையா லழுந்தி நிலமீ துழன்று விரிகுடும்ப
நினைவே பொருந்தி யதுவே கவலை நிதமிருந்தா
லுனையே நினைந்தென் வினையே தவிர்நா ளுறுவதெவ
னெனையா ளகத்தி நகர்வாழு மீச வெனக் குரையே.

நல்வினை, தீவினையால் அழுந்தி இந்நிலவுலகத்தில் குடும்ப நினைவுகளிலேயே மூழ்கி நாள்தோறும் அதுவே கவலையாக இருந்தால், உன்னை நினைந்து என் வினையைத் தவிர்க்கும் நாளை நான் எப்பொழுது பெறுவேன். என்னையாளும் அகத்திநகர் வாழும் ஈசனே! எனக்கு உரைப்பாயாக.

உழன்று – வருந்தி. நிதம் – தினந்தோறும்.

If I remain submerged in ***Vinai***[1] mine
And wallow in worris familial
Everyday in my life here on earth,
When shall I think of thee
And rid myself of ***Vinai*** mine?
Oh! Lord who doth rende at **Akattinakar**
Do tell me please

1. ***Vinai*** – good and bad deeds of a human being.

## 47. வண்டு

(தலைவி, தலைவன்பால், வண்டைத் தூதாக விடுப்பது)

### நேரிசை வெண்பா

உரைகொளகத் தீச னொருவீதி சுற்றி
விரைவில்வரக் கண்ட வெறியேன் – கரைகாணா

துண்டேன் மயக்க மொருநொடியிற் சென்றவரை
வண்டே வரச்செய்கு வாய்.

எல்லோருடைய புகழுரையையும் கேட்கும் அகத்தீசன் வீதி சுற்றி வருவதைக் கண்டு காமம் கொண்ட நான் எல்லையில்லாத மயக்கமடைந்தேன். வண்டே! ஒரு நொடியில் சென்று, அவரை வரச் சொல்லுவாய்.

On seeing the all hailed **Akattīcan**
Go fast on his ritual round in a street,
I did become enamoured in frenzy boundless
Oh! Beetle, rush to the lord in a trice
And bring him before me at once.

### 48. மதங்கு

(வாட்களைக் கையில் ஏந்தி ஆடிக் கொண்டு வரும் பெண்களைப் பார்த்துக் காதல் கொண்டவர் பாடுவது)

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

வாளிரண்டு கைகள்கொடெம் மனமுருகும் படிவிசிறி மருங்குல் வாடத்
தாளிரண்டுநோவவிரு தனமசைய வகத்திநகர்ச் சாருந் தேவ
ராளிரண்டு பதங்கள்பணிந் தாடிவரு மதங்கியரே யடியேன் பேரில்
வேளிரண்டு கரங்களினால் விடுபாணத் துயர்தீரும் விதஞ்செய் வீரே.

இரண்டு கைகளிலும் வாளை ஏந்திக் கொண்டு, என் மனம் உருகும்படி அவற்றைவீசி, இடைவாட, கால்கள் இரண்டும் வருந்த, இரண்டு தனங்களும் அசைய, அகத்தீசரின் பாதங்களைப் பணிந்து ஆடி வரும் மதங்கியரே! அடியேன் பேரில் மன்மதன் தன் இரண்டு கைகளினால் விடும் அம்புகளின் துன்பத்தைத் தீர்ப்பதற்கு வழி செய்வீராக.

மருங்குல் – இடை. வேள் – மன்மதன். பாணம் – அம்பு.

### The fascinating dance of *Matarki* lasses

Oh! *Matarki*[1] lasses
You brandish swords in boh hands yours
Melting my mind much thereby
Straining thy waists and hurting thy feet both
With your breasts both swinging as well
Thus do all of you dance
In pious worship of **Akattīcar's** divine feet both
Oh! lasses lovely
As I do suffer from pangs of love acute
Caused by the arrows flowery
Hurled at me by **Manmatan**[2] with his hands both
Help me to get rid of of the pangs such.

1 *Matarki* - A sixteen year old girl who brandish the swords.
2. Manmatan - God of love in Hinduism. He is supposed o wield a sugarcane bow and flowershafts with which he makes people love born.

### 49. கலி விருத்தம்

செய்வ ளங்கொ டிருவகத் தீசர்தம்
மொய்வ ளம்பத முன்னித்து திப்பிரேன்
மெய்வ ளம்புகழ் மேவத்த மாயுளு
முய்வ ளம்பெற வோங்கு மறிவிரே.

நாம் செய்யும் பூசைகளை ஏற்றுக்கொள்ளும் அகத்தீசருடைய வளம் பொருந்திய பாதங்களை நினைத்துத் துதிப்பீர்களேயாயின் உண்மையான வளமும், புகழும் பொருந்திய செல்வமும், ஆயுளும், வளம்பெறக் கிடைக்கும் என்று அறிவீராக.

Oh! Folk, do know and realize
That you will acquire prosperity real

Fame and wealth proper
Besides a lifespan long
If thou contemplate in worship pious
The prosperous feet of Lord **Akatt¢car**
Who doth accept offers all
Of our prayer and worship

### 50. கொச்சகக் கலிப்பா

அறிவறியா மாந்த ரகத்தொறுஞ்சென் றாங்கென்
வறிதுபல சொல்லி வருந்திட வையாமற்
செறிவினையை யோட்டித் திருவலஞ்சே ரச்செய்
நெறிதவறா நீதி நெறிகொளகத் திப்பரனே.

நெறி தவறாத அகத்தீஸ்வரரே! அறிவில்லாத மாந்தர்களின் இல்லந்தோறும் சென்று அங்கே வறுமையெல்லாம் சொல்லி வருந்துமாறு செய்யாமல் என்னுடைய வினையை நீக்கி வளம் செய்வீராக.

Oh! Lord of **Akatti**
Who doth never deviate from the code of justice
Instead of making me call on stupid folk
And tell them my penuty in humiliation abject,
Do please dispel ***Vinai*** mine
And grant me prosperity in thy grace divine.

### 51. குயிற் பயிற்று

(குயிலிடம் தலைவனை வரச்சொல்லுதல்)

#### கட்டளைக் கலித்துறை

பரனே யகத்தி யரனே கடுக்கை பணிந்திசந்
திரனே றுசடா தரனே யழிவிற் றிரிபுரசங்

கரனே சுரர்க்குக் சுரனே வரர்க்குக் கதிதருநல்
வரனே வருக வருகவென் றோத மரக்குயிலே.

பரனே! அகத்தீஸ்வரத்திலுள்ள அரனே! கொன்றை, பாம்பு, கங்கை, சந்திரன் ஆகிய அனைத்தும் ஏறியுள்ள சடையை உடையவனே! அழிவில்லாத முப்புரத்தை எரித்தவனே! தேவாதி தேவனே! வரம் வேண்டுபவர்க்கு நற்கதியைத் தருகின்ற வரனே! வருக, வருக என்று குயிலே! கூவுவாயாக.

**கடுக்கை** – கொன்றை. **பணி** – பாம்பு. **நதி** – கங்கை. **சடாதரன்** – சடையைத் தரித்தவன். **சுரர்** – தேவர்.

Oh! Cuckoo[1] in the tree
Call the Lord in sweet chanting notes hine as,
Oh! **Paran**[2] and Lord **Civan** of **Akatti**
Oh! Lord who dost wear
***Konrai***, snake, ***Kankai*** and the moon
On thy locks matted
Oh! Lord who did set ablaze ***Tiripuram***
Oh! Lord of **Tevars** all
Oh! Benefactor who dost grant well being eternal
To all who seek boons from Thee,
Oh! Lord come, come hither
Do call the Lord thus here, Oh! Cuckoo in the tree.

1.**Cuckoo** - a bird whose notes are melodious. The conventional poetic device of sending a call to the Lord through a Cuckoo by the heroine *(Talaivi)* is employed here. This poetic devices called ***Kuyir Payirru.***

2. **Paran** - The Lord of the other world.

### 52. காலம்

(காலத்தைப் பற்றிப் பாடுதல்)

மடக்கு

எண்சீர் ஆசிரிய விருத்தம்

குயிலினங்கண் மரக்கொம்பிற் குடையுங் காலம்
　　கோனனங்கன் மலரம்பிற் குடையுங் காலம்
மயிலினங்க டோகைவிரி வாகுங் காலம்
　　மல்லிகையின் வாசம்விரி வாகுங் காலம்
வெயிலினொளி மழுங்கிமதி மேவுங் காலம்
　　வேளனையார் தோளின்மதி மேவுங் காலம்
அயில்விழியார் விரகத்தா லழுந்துங் காலம்
　　அகத்திநக ரீசரவ ரடையாக் காலம்.

குயிலினங்கள் மரக்கிளையில் சேரும் காலம் ; மன்மதனின் மலர் அம்பிற்கு இளையோர்கள் வருந்தும் காலம் ; மயிலினங்கள் தோகையை விரித்து ஆடும் காலம்; மல்லிகையின் மணம் எங்கும் வீசம் காலம் ; வெயில் ஒளி மழுங்கி சந்திரன் ஒளிவீசும் காலம் ; மன்மதன் போன்ற ஆடவர் தோளில் பெண்கள் சேரும் காலம் ; வேல் போன்ற விழிகளை யுடையவர் விரகத்தால் வாடும் காலம் எதுவென்றால் அகத்தி நகர் ஈசரை அவர்கள் அடையாத காலம்.

குயில் + இனங்கள் + மரக்கொம்பில் + குடையும் காலம். கோன் + அனங்கன் + மலரம்பிற்கு + உடையும் காலம். **மதி** – சந்திரன் போன்ற முகமுடைய பெண்கள். **அனங்கன்** – மன்மதன். **மழுங்கி** – குறைந்து. **அயில்** – வேல்.

### *Kālam* – Time

The time when
The flocking Cuckoos mate at treebranches,
The youth suffer from **Ma<u>n</u>mata<u>n</u>'s** flowery shafts,
The peacocks unfold their plumes to expand,
The fragrance of jasmine doth waft wide,

The luster of the moon supersedes the fading sunlight,
Women nestle on the shoulders of **Vel** like men handsome
And women with sharp eyes spearlike
Suffer from pangs of lust oppressive
Is the time when all the folks such
Fail to reach Lord **Akattīcar** for succour

### 53. சீர்பாதப் புகழ்ச்சி

(இறைவனுடைய திருவடியைப் புகழ்தல்)

ஏழடிப் பஃறொடை வெண்பா

காலன் மடியக் கதமோ டுதைத்துவு
நீலநிற மாலு நினைந்தருச் சித்ததுவுங்
கோலத் திருத்தில்லை கூடிநட மாடியதுஞ்
சோலைகொளு மாரூரிற் தூது நடந்ததுவும்
மாலயனுங் தேடி மருவா திருந்ததுவுஞ்

எமன் அழியக் கோபத்துடன் உதைத்தவும், நீல நிறத் திருமால் அர்ச்சித்ததும், அழகிய தில்லையிலே நடனமாடியதும், சோலைகள் நிறைந்த திருவாரூரில், சுந்தரர்க்காகப் பரவையிடம் தூது சென்றதும், ஒழுக்கமுள்ள தவத்தை உடையவர்கள் மனத்திற்கு உகந்ததுவும், திருமாலும், பிரமனும் தேடிக்காண முடியாததும் அகத்தீசருடைய இருதாள்கள்.

**காலன்** – இயமன். **முடிய** – இறக்க. **கதம்** – சினம். **சீலம்** – ஒழுக்கம். **மருவுதல்** – பொருந்துதல். சுந்தரமூர்த்தி நாயனாரின் முதல் மனைவி பரவை நாச்சியார். இரண்டாவதாகச் சங்கிலி நாச்சியார் என்ற பெண்ணை மணந்ததனால் பரவை ஊடல் கொள்ளச் சிவன் அவளிடம் தூது சென்று அவள் சினத்தை மாற்றினார் என்பது பெரிய புராணம். (ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் – பாடல்கள் 319 – 367).

### Praising the feet of the Lord

It was Lord **Akattīcar's** feet both divine
That kicked **Kālan**[1] in anger to death

And held in whorship earnest by the bluehued **Māl**
That danced in **Tillai**[2] beautiful
And walked to mediate at **Ārūr** surrounded by groves
Pleasing to the minds of saints virtuous
And beyond the reach of **Māl** and **Piramaṉ**
Who did search for them in vain.

1. **Kālaṉ** - the god of death. Lord **Civaṉ** kicked **Kalaṉ** to death in order to save his devotee **Mārkkṇṭaṉ**.

2. **Tillai - Citamparam** where **Civaṉ** manifests himself as **Naṭarājar** or the dancing God.

**54. இரங்கல்**

(தலைவனுடன் போகத்துணிந்த தலைவிக்கு அவள் செல்லும் வழியின் கொடுமையைக் கூறித் தோழி விலக்குதல்)

**கட்டளைக் கலித்துறை**

தாளடி வைக்கச் சகிக்காத பாலைத் தனிவனத்துன்
னீளடி காண்முன் சுடுமகத் தீச னெறியிலவ
னாளடி யோடு தொடருதல் கிட்டா தடியுரைத்தேன்
கேளடி யென்மொழி நன்மொழி யாகுங் கிளிமொழியே.

கிளி போன்ற மொழியை யுடையவளே! அடி வைக்குமுன் சுடும் அகத்தீசர் பாலை வழியில் அவன் அடியின் பின்னே உன்னால் தொடர முடியாது. என் பேச்சைக் கேள். அது உனக்கு நன்மை தரும்.

## *Iraṅkal* (Expression of concern)

The friend (*Tōḻi*) of the *Talaivi* (heroine) warns the latter of the terrible desert terrain which she has to tackle while going along with the *Talaivaṉ* (hero).

Oh! Damsel parrotvoiced,
In the lonely desert unsteppable
Where it will scorch your feet
Even before you step out there,
You cannot follow in the footsteps
Of Lord **Akattīcar**
Do listen to my advice wellmeant for thee.

### 55. இரங்கல்

(தலைவன் வராமையால் தலைவிபடும் துயரம் கண்டு, அவன் என்று வருவான், என இரங்கிக் கூறுதல்)

**கலிவிருத்தம்**

மொழிபெறு மகத்திய முனிவ ரேத்துமோ
ரழிவிலா வீசர்வந் தடைவ தெந்தநா
ளெழிலிவ ளொருசர மேற்கு முன்மத
னொழிவிலாச் சரத்தினை னுரைக்கற் பாலதோ ?

தமிழ் மொழியை இறைவனிட் பெற்ற அகத்திய முனிவர் புகழ்ந்தேத்தும் அகத்தீசர் இவளைச் சேர வரும் நாள் எந்நாளோ? மன்மதனின் ஒரு அம்பை இவள் அழகு ஏற்பதற்குள் அவன் விடும் அடுத்த பாணங்களின் எண்ணிக்கையை உரைக்க இயலுமோ? (அடுத்தடுத்து மன்மதன் பாணங்கள் இவளைத் துளைக்கின்றன என்பது பொருள்)

***Irankal***

**(Expression of Sympathy by *Tōḻi* at the plight of the love lorn *Talaivi*)**

When will that day dawn
For **Akattīcar** worshipped by **Akattiyan**
Who did acquire ***Tamil***[1] from the Lord,
To arrive as a mate for this damsel here ?
Even before this lovely lass can absorb

Just one flowery arrow of **Manmatan**
He doth shoot his shafts in succession quick
Can anyone count the number of arrows such ?

1. acquired **Tamil** – **Akattiyan** is supposed to have acquired Tamil Language from Lord **Civan** himself.

### 56. இடைச்சியார்

(பால், தயிர் விற்கும் இடைச்சி மேல் காதல் கொண்ட ஒருவன் பாடுவது)

#### எண் சீராசிரிய விருத்தம்

பால்வெண்ணெய் நெய்தயிர்மோர் பலவுங் கொண்டு
பகரகத்தி நகர்வீதி தோறுஞ் சென்று
கால்நோவ வலைந்துபக ரிடைச்சி யாரே
கலயமதை மூடிடுமோ ராடை நீக்கும்
மால்தருமா மயக்கமதைப் போக்கு மென்னில்
வாங்கிடுவேன் பால்முழுதும் விரைவி லென்னைப்
போல்வாங்கு பவருமிலை யாதலா னீரும்
புகுந்துமது பால்தந்து பொருள்கொள் வீரே.

பால், வெண்ணெய், நெய், தயிர், மோர் பலவற்றையும் எடுத்துக் கொண்டு அகத்தி நகரின் (அகத்தியான் பள்ளி) வீதிகளில் கால் வருந்த அலைந்து விலை பகரும் இடைச்சியரே! கலயத்தை மூடிய ஆடையை நீக்கி நீ தரும் பால் என் மயக்கத்தைப் போக்குமென்றால் யான் பால் முழுதும் வாங்கிடுவேன். என்னைப் போல் விலையில் வாங்குபவரும் இலர். ஆகவே நீர் உமது பால் தந்து பொருள் கொள்வீர். (கலயத்தை மூடும் ஆடை நீக்கிப் பால் தருவீர் என்பது சிலேடை.)

**சிலேடை** – இரு பொருள் படக் கூறுதல்.

### *Itaicciyār* (Cowherdesses)

(sung by a man enamoured of a woman of the cowherd community)

Oh! Cowherdesses,

Who carry milk, butter, ghee, curd and buttermilk
And walk the streets of **Akatti**[1] straining your legs.
To quote their prices and hawk them
If the milk which thou give me.
After removing he cloth that covers the pot
Can remove my daze amorous,
I will buy the entire milk yours
Noneelse can buy like me so fast,
Hence give me the milk and collect its cost.

**1. Akatti – Akattiyāṉpaḷḷi.**

### 57. நேரிசை வெண்பா

பொருளறியாப் புல்லரிடம் போய்ப்பாடிப் பாடிப்
பொருளறியா னானேன் புனிதப் – பொருளே
னகத்தினக லாதிருக்க வாவீ னுழன்றே
னகத்தினக ராளெனத ரா.

அகத்திநகர் ஆளும் எனது அரனே! மேலான தூய பொருளானது என்னுள்ளத்தில் அகலாதிருக்கவும், பொருளறியாப் புல்லரிடம் சென்று, பாடிப்பாடிப் பொருளறியாதவனாகி வீணாய்த் துன்புற்றேன்.

புல்லர் – அற்பர். **உழன்றேன்** – துன்புற்றேன்.

Oh! **Araṉ**[1] who dost rule over **Akattinakar,**
I did sing often before mean folk
Who did not know what I meant
And suffered from such wasteful exercise meaningless,
May the sacred thing exalted and meaningful
Held fast in my mind
Be there forever and never go away

**1. Araṉ** – Lord **Civaṉ**

### 58. கட்டளைக் கலித்துறை

அரவர சங்கர சம்போ சிவசிவ வாமையொடென்
பரவர வாபர ணத்த சதாநந்த பாதிமதிச்
சிரவர தாவுமை பாக மகதேவ தேவகங்கா
தரவர வென்றகத் தீசனை யேதினநீ தாழ்மனமே.

மனமே! "அரஹர! சங்கரா, சம்போ! சிவசிவா! ஆமையோடு, எலும்பு, அரவு ஆகிய ஆபரணங்களை அணிந்தவனே! சதா ஆனந்தமாயிருப்பவனே! பாதி மதியைச் சிரசில் அணிந்தவனே! உமை பாகனே! மகா தேவனே! கங்காதரனே வா" என அகத்தீசனைத் தினம் பணிவாயாக.

**அரவர** - அர + அர. **அரன்** - சிவன். ஆமையோடு + என்பு + அரவு + அரசு + ஆபரணத்த. **சிரவரதா** - சிரத்திலணிந்து அபயம் அளித்தவன். **சிரம்** - தலை. **கங்காதரன்** - கங்கையைத் தலையில் அணிந்தவன்.

Oh! mind,
Hail **Akattīcan** in worship humble
As **Arahara**[1] **Caṅkara**[2], **Campō**[3] and **Civa Civa**[4]
Oh! Lord who dost wear
Tortoiseshell, bones snake and **Aravu**[5]
As ornaments Thine!
Oh! God ever ecstatic,
Oh! Lord who dost wear the crescent moon on Thy head
Oh! **Umaipākan̲**[6] and **Kaṅkātaran̲**[7]
Do come please
Greet the Lord thus, Oh! mind

1. **Arahara, 2. Caṅkara, 3.Campō, 4.Civa Civa** - The various appellations of Lord **Civan̲** by which he is addressed or greeted by His devotees.

5. ***Aravu*** - snake.

6. **Umaipākan̲** - **Civan̲** who holds his consort **Umai** as a part of his person.

7. **Kaṅkātaran̲** - **Civan̲** who holds **Kaṅkai** river on his matted locks.

### 59. ஊசல்

(இறைவனை அல்லது இறைவியை ஊஞ்சலில் இருத்தி ஆடீர் ஊசல்! ஆடுக ஊசல்! என்று ஊஞ்சலாட்டுவது ஊசல் எனப்படும். சில மகளிர் இறைவன் புகழைப் பாடிக்கொண்டு தாங்களே ஊஞ்சலாடுவதும் உண்டு)

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

மனமெனுமோர் சோலைதனில் வளரும் பத்தி
மரத்தினிலோர் சினையாக மருவு மூக்கந்
தனிலன்பாஞ் சங்கிலியைத் தாழ விட்டுத்
தயங்குமுன தருட்பலகை தன்னை மாட்டி
யெனதுபிறப் பிறப்பெனுமோ ரிகல்கொ ளூச
லினியடையா வண்ணமுற வேறி ஞான
வணையுடனே யிருந்துமகிழ்ந் தாடீ ரூச
லகத்திநக ராளரசே யாடீ ரூசல்.

மனமாகிய சோலையில், பக்தியாகிய மரத்தில், ஊக்கமாகிய கிளையில், அன்பாகிய சங்கிலியைத் தொங்க விட்டு அருளாகிய பலகையை மாட்டி, அதில் ஏறி, ஞானமாகிய பஞ்சணையில் இருந்து, பிறப்பு இறப்பாகிய மாறுபாடுடைய ஊஞ்சல் இனியென்னை யடையாதவாறு அன்புடனே ஊஞ்சலாடுவீராக. அகத்தி நகரை யாளுகின்ற இறைவனே! ஊஞ்சல் ஆடுவீராக.

**சினை** – கிளை. **இகல்** – மாறுபாடு.

### *Ūcal* – swing

(Placing a God or Goddess on a swing and moving it to and fro. This devotional practice is called ***ūcal***)

In the garden of mind
At the tree of ***Pakti***[1] which grows there
On the branch of ***ūkkam***[2] in that three
With the chains of ***Anpu***[3] suspended
To link and hold the plank of ***Arul***[4]

Upholstered with the cushion of ***ñāṉam***[5]
In a swing such,
Oh! Lord who dost rule over **Akattinakar**
Do please swing in Thy love divine
As to relieve me of my swing miserable
Between the differing cycles of birth and death
Do please swing thus, Oh! Lord.

1. ***Pakti*** – Devotion.
2. ***ūkkam*** – motivation or encouragement
3. ***Aṉpu*** – Love.
4. ***Aruḷ*** – Divine Grace.
5. ***Ñāṉam*** – Wisdom.

**60. பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்**

ஊனமு ளவய முடைத்தவ ரேனு
முறுபவத் தொழிலுள ரேனு
முதித்ததோர் குலத்திற் றாழ்பவ ரேனு
மொழிவிலா நோயுள ரேனு
மீனமின் மனதோ டீசசங் கரனே
யிறையென் றனுதினங் கழறி
யேத்துவ ரெவரோ வவர்களே கண்டீ
ரியாந்தொழு மடியர்க ளாவா
ரானநல் லொழுக்க மடைந்தவ ரேனு
மருமறை வேள்வியிற் புகழை
யடைந்தவ ரேனு மந்தணர் குலத்தி
லவதரித் திட்டவ ரேனும்
வானவ ரேனு மாலயன் முதற்றே
வணங்கிடு மகத்திய நகரில்

வாழுநம் மீசன் மலரடி வணங்கார்
மாடுணும் புலையர்க டாமே.

உறுப்பு குறைபாடுடையவராயிருந்தாலும், இழிந்த தொழிலுடையவராயிருந்தாலும், தாழ்ந்த குலத்தில் பிறந்தவரானாலும், நீங்காத நோயுடையவரானாலும், களங்கமற்ற மனத்தோடு, 'ஈசனே! சங்கரனே! இறைவனே!' என்று நாள்முழுதும் வணங்குபவர் எவரோ அவரே நான் வணங்கும் அடியார். நல்ல ஒழுக்க முடையவரானாலும் வேதங்களைக் கற்று, வேள்வி செய்பரானாலும், அந்தண குலத்தில் பிறந்தவரானாலும், தேவர்களாயிருந்தாலும், திருமாலும், பிரமனும், வணங்கக் கூடிய அகத்திநகரீசரின் அடியை வணங்காதவராய் இருந்தால் அவர்கள் மாட்டையுண்ணும் புலையருக்குச் சமமாவார்கள்.

**ஊனம்** – குறைபாடு. **அவயவம்** – உறுப்பு. **உறு** – மிக்க. **பவ** – பாவமான. **ஈனம்** – களங்கம். **கழறி** – துதித்து. **அவதரித்தவர்** – பிறந்தவர்.

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ
மாதேவர்க கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யாராகி
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகி
லவர்கண்டீர் நாம்வணங்குங் கடவு ளாரே.

என்னும் அப்பர் தேவாரம் தனித்திருத்தாண்டகப் பாடலும் (முதல் திருத்தாண்டகம், பாடல் 10)

பாதியாய் அழுகியகால் கைய ரேனும்
பழிதொழிலும் இழிகுலமும் படைத்தா ரேனும்
ஆதியாய்! அரவணையாய்! என்பார் ஆகில்
அவாரன்றோ யாம்வணங்கும் அடிகள் ஆவார்
சாதியால் ஒழுக்கத்தால் மிக்கோ ரேனும்
சதுர்மறையால் வேள்வியால் தக்கோ ரேனும்

போதில்நான் முகன்பணியப் பள்ளி கொள்வான்
பொன்னரங்கம் போற்றாதார் புலையர் தாமே.

என்னும் திருவரங்கக் கலம்பகப் பாடலும் (பாடல் 15) இங்கு ஒப்பு நோக்கத் தக்கன.

Even folk with limbs defective and mean occupation
And those of low birth or chronic sufferers with diseases incurable
If they hail **Akattīcar** daily in worship earnest
As ***Icā***[1], ***Cankarā***[2] and ***Iraivā***[3]
They are devotees genuine whom I worship
Even virtuous folk or scholars erudite in scriptures
Who perform ***Vēḷvi***[4] but properly
And ***Antaṇars***[5] highborn or **Tēvar**[6] as well
If they fail to worship the feet of **Akattīcar**
Whom **Māl**[7] and **Ayan**[8] did worship,
They are but beefeating ***Pulaiyar***[9] lowly.

1. ***Icā*** – Oh! Lord.
2. ***Cankarā*** – an appellation of Lord Civan
3. ***Iraivā*** – Oh! God.
4. ***Vēḷvi*** – also known as *Yākam* which means a ritual ceremony performed by raising sacred fire to propitiate gods,
5. ***Antaṇars*** – Brahmins who belong o the uppercaste in Hinduism.
6. **Tēvar** – Heavenly beings.
7. **Māl** – **Tirumāl** or **Viṣṇu** the god of protection in Hinduism
8. **Ayan** – **Piraman** the god of creation in Hinduism
9. ***Pulaiyar*** –Those who born in a low caste.

61. நேரிசை வெண்பா

தாம மலரைச் சடையிற் றரித்தபிரான்
வாம மதிலுமையை வைத்தபிரா – னீமமாங்

கானகத் தேநடனங் கண்டபிரான் சூழுமொரு
காவகத் திப்பிரான் காண்.

சோலை சூழ்ந்த அகத்திநகர் வாழும் சிவன், கொன்றை மலரைச் சடையில் தரித்தவர். இடப்பாகத்தில் உமையை அமைத்துக் கொண்டவர். சுடுகாட்டில் நடனமாடுபவர்.

தாமம் - கொன்றை. வாமம் - இடப்பாகம். கா - சோலை.

The Lord who doth reside
At **Akattīnakar** surrounded by groves
Is a God
Who wears **Konrai** flowers on his locks matted
Holds **Umai** on his lef half
And dances at cremation ghats.

### 62. பாண்

(தலைவியின் ஊடலைத் தணிக்கத் தலைவன் பாணனைத் தூதாக விடுக்க, தலைவி அவனை இகழ்ந்து கூறுவது)

#### அறுசீர் ஆசிரிய விருத்தம்

காணா திருந்துனையே கண்டறிந்து வாவென்று கழறத் தூது
பாணாநீ வந்தனையோ பரத்தையர்பாற் காதலரைப் பரவ விட்டு
வீணாலுன் வீணையினின் மயங்குவனோ விசையாக மேவி நாகப்
பூணாரு மகத்திநகர் புண்ணியனைப் போய்வருகப் புகலு வாயே.

பாணனே! தலைவர் என்னைக் காணாதிருந்து விட்டுப் பின் உன்னைக் கண்டறிந்து வாவென்று அனுப்பத் தூது வந்தனையோ? நீ அவரைப் பரத்தையரிடத்தில் உறவு செய்யவிட்டு வீணை மீட்டினாய். உன் வீணையில் நான் மயங்குவேனோ? நாகப் பாம்பை அணியாகப் பூண்ட அகத்தீசுவரரிடம் விரைந்து சென்று, 'போய் வா' என்று சொல். (என்னிடம் வர வேண்டாம் என்று பொருள்)

பரத்தை - விலைமகள். பூண் - ஆபரணம்.

### *Pāṇ*

(***Talaivan*** (hero) sending a ***Pāṇan*** as his messenger to mediate in the ***ūṭal*** (lovers tiff) between the ***Talaivi*** (heroine) and himself. The ***Talaivi*** scolds the ***Pāṇan*** here)

Oh! ***Pāṇan***[1] ,
Hast thou gone over here as a messenger
Of the ***Talaivar*** who has not cared to see me so far ?
Thou hast strummed your ***Vīṇai***[2]
After allowing my lover to have amour with ***Parattaiyar***[3]
I won't be lured by your ***Vīṇai*** here
Go fast to **Akattīcan** who sports a snake as ornament His,
And ask him to go away and get lost.

1. ***Pāṇan*** – A singer and instrumental musician playing on yāḻ or ***Vīṇai***
2. ***Vīṇai*** – a stringed musical instrument.
3. ***Parattaiyar*** – Courezens or prostitutes.

**63. கட்டளைக் கரலித்துறை**

வாயினாற் சொல்வது மட்டும் பிறர்மா மனமகிழ்ச
காயமே செய்குவ னென்றுதன் காரியங் காணுமொரு
பாயமே செய்துமிப் பாரிற் றரித்திடும் பாபிகளாந்
தீயர்கள் தன்னையும் ஏன்படைத் தாயகத் தீசரனே.

அகத்தீசுவரரே! வாயினால் பிறர் மனமகிழ உதவி செய்வதாகக் கூறிவிட்டுத் தன் செயலையே முடிக்க உபாயம் தேடும் வஞ்சகர்களை இப்பூமியில் ஏன் படைத்தாய்?

சகாயம் – உதவி. உபாயம் – வழி.

Oh! Lord **Akattīcuran,**
Why hast thou created on earh here
The folk deceitful

Who promise help to others in mere lipservice
As a ploy to achieve their own ends.

**64. மடக்கு யமகம்**

**(நேரிசை வெண்பா)**

அகத்தீ சுரனை யகத்தே நினைய
வகத்தீ வினையி னகத்தை – யகற்றி
யகத்தீ யளித்து னகத்தே யிருப்ப
னகத்தே யிருத்தெ னகம்.

அகத்தீசுவரனை மனத்தில் நினைத்தால் தீவினையையும் அகங்காரத்தையும், அகற்றி உள்ளொளி உண்டாக்கி உன் உள்ளத்தில் இருப்பான். எனவே மனத்தில் அகத்தீசனை இருத்துவாயாக.

*அகம்* – *மனம்; அகங்காரம்,* இடம், உள்.

If thou contemplate **Akattīcan** in thy mind
He will dispel the ***Tīvinai***[1] and ego thine
And provide inner light indeed
Hence hold him fast in mind thine.

1. *Tīvinai* – The misdeeds of a person and their impact.

**65. கட்டளைக் கலித்துறை**

அகமே வுயிரை நிலையாய் நினைந்திவ் வலையுடுத்த
சகமே லுழன்று மதர்மா விழியர் தருமயலின்
சுகமே சுகமென் றிருக்கி லதுநற் சுகந்தருமோ
விகமே தருநற் சுகமகத் தீச னிருபதமே.

மனமே[1] உயிரையே நிலை என்று எண்ணி இந்த அலைகடலை ஆடையாக உடுத்த உலகத்தில் உழன்று மதர்த்த விழியையுடைய பெண்கள் தரும் மோகத்தின் சுகமே

சுகமென்றிருந்தால் அது உண்மைச் சுகமாகுமா? அகத்தீசன் இருபதந்தான் சுகம் கொடுக்கும்.

**அகம்** – மனம். **சகம்** – உலகம். **மதர்த்த** – அகன்ற. **மயல்** – மயக்கம்.

Oh, mind
If thou think that life is everlasting here
And wallow in this surfy seaclad earth
Deeming the lustful pleasure which wide eyed women provide
As the only real pleasure on earth
Will it be pleasure perfect ?
Only the divine feet both of **Akattīcan**
Can give thee enduring pleasure eternal.

### 66. எண்சீராசிரிய விருத்தம்

அகத்தீச னிருபதமே யகத்தி னாளு
மன்போடு தியானிக்கு மடியேன் யானென்
றகத்தினிலே சற்றேனு மறியா துற்றா
யகன்றிடுவா யிப்பொழுதே யன்றே லுன்ற
னகத்தையெலா மொருநொடியி லடக்கி யாளு
மடலுற்றோன் செந்தமிழுக் கரசு மானோ
னகத்தியனே நொக்கிடுவா னறியா நோயே
யறமேசெய் தறியாரை யடைபோ வின்னே.

அறியாமையாகிய நோயே! அகத்தீசர் இருபதத்தை மனத்தில் அனுதினமும் தியானம் செய்யும் அடியேன் நான் என்று அறியாது என் மனத்தில் வந்து குடி புகுந்தாய். இப்பொழுதே அகன்றிடுவாய்; இல்லையேல் உன் அகங்காரத்தை யெல்லாம் ஒரு நொடியில் அடக்கி ஆளும் வலிமை பெற்றவனும், தமிழுக்கு அரசனும் ஆன அகத்தீசுவரனே அழித்து விடுவான். எனவே அறம் செய்தறியாதவரிடம் இப்போதே போய்ச் சேர்.

அடல் – வலிமை. **நொக்கிடுவான்** – அழித்து விடுவான். **இன்னே** – இப்பொழுதே.

Oh! Mālady of ignorance,
Not knowing that I worship in meditation deep,
The feet both of **Akattīcan** every day
Thou did enter and occupy my mind
Go away now itself
As otherwise **Akattīcan** who can curb and conquer arrogance thine,
And who is the sole[1] monarch of **Tamil**
Will destroy thee
Hence leave me at once
And seek such folk
As have never been virtuous in lives theirs

1. **Sole monarch of Tamil** - Lord Civan is supposed to be the Chief patron of Tamil languague.

### 67. சிந்தியல் வெண்பா

இன்னறவிர்க் குங்கடவு ளின்பமளிக் குங்கடவு
ளன்ன மளிக்குங் கடவு ளன்றி
யகத்திநகர்க் குங்கடவு ளாம்.

அகத்தீசன் இன்னல் தவிர்க்கும் கடவுள்; இன்பம் அளிக்கும் கடவுள்; அன்னம் அளிக்கும் கடவுள்; அன்றியும் அகத்தி நகர்க்கும் அவனே கடவுள்.

**இன்னல்** - துன்பம். **தவிர்க்கும்** - நீக்கும். **அன்னம்** - உணவு.

The God who dispels distress
And who doth grant happiness
Besides, being a divine provider of food to all
Is the Lord of **Akattinakar** as well.

### 68. குறம்

(குறத்தியர் தம் பெருமை கூறிக் குறி சொல்லுதல்)

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

ஆமறை யோடிரு நாழியெனு மரிசியு மேகிழி யாடைகொடு
வாமுறை யாகம கிழ்ந்துமுனம் வந்துவ லக்கர நீட்டுவையே
னீமுறை யாகநி னைந்துளதோர் நினைவுகள் யாவும்வி டாதிவணே
நாமுறை செய்வம கத்தியனார் நல்லருள் பெற்றகு றத்தியரேம்.

இருநாழி அரிசியும், கிழிந்த ஆடையும் கொடுத்து மகிழ்ச்சியாக முன் வந்து கை நீட்டினால் போதும்; அகத்தீசர் அருள்பெற்ற குறத்தியராகிய நாங்கள், நீங்கள் மனத்தில் நினைத்துள்ள யாவற்றையும் விடாது முறையாகச் சொல்லுவோம்.

## *Kuṟam*[1] – Gypsylore

(Gypsywomen (***Kurattis***) declare their proficiency in ***Kuṟi*** or sooth saying and predictions)

If you give us just two *nāḻis*[2] of rice
And torn clothes some,
And extend right hand thine willingly
We the gypsies blessed with the grace divine
Of Lord **Akattīcaṉ**
Will reveal thy thoughts and aspirations all
Now itself precisely for sure
And predict their outcome as well.

1. ***Kuṟum*** – In Tamil poetry *Kuṟum* or gypsylore forms a part. *Kuṟavars* and *Kuṟattis* are nomadic men and women with some special skills like soothsaying besides their traditional means of livelihood. The study of that gypsy tribe is known as *Kuṟum*.

2. *Nāḻis* – A volumetric measure.

### 69. இதுவு மது

(இதுவும் குறம் என்றும் உறுப்பு)

### அறுசீர் விருத்தம்

குறத்திய ரெம்மொழி கேளம்மே கூறுமகத் தீசன் மேலே
யுறத்திய னித்தாசை கொண்டா யுன்றனைநா ளைக்கே வந்து
திறத்திய லோடணை வார்மயலுந் தீருமோர் சேயுமு தித்திடுமா
னிறத்திய லார்குழ விப்பெயரு நிலமதில் வேளென்றிசையுறுமே.

அம்மே! குறத்தியாகிய என் மொழியைக் கேள்! அகத்தீசர் மேலே ஆசை கொண்டுள்ளாய். உன்னை நாளைக்கே வந்து அவ்வகத்தீசர் அணைவார். உன்றன் ஆசையும் தீரும். ஒரு குழந்தையும் பிறக்கும். அக்குழந்தை முருகன் என்ற பெயருடன் புகழ் பெற்று விளங்கும்.

**சேய், குழவி** – குழந்தை. **வேள்** – முருகன். **இசை** – புகழ்.

### *Kuram* – Gypsylore

Oh! *Ammē*[1],
Do listen to what we ***Kurattiyar***[2] tell thee,
Thon art enamoured of Lord **Akatticar**
He will come to you tomorrow itself
And hug thee to appease desire thine,
A child will be born to thee as well,
Who will grow up and glow
As **Murukan**[3] illustrious of glory great.

1. *Ammē* – a term of respect or endearment used to address women. It means Oh! Madam.
2. ***Kurattiyar*** – Gypsywomen
3. **Murukan** – the younger son of Lord **Civan** and an exclusive Tamil God noted for his bravery and handsomeness.

### 70. கலிவிருத்தம்

இசையுறு மகத்திய வீசற் குறுபணி
திசையுறு தலமெலாந் திகழச் செய்யுமோர்
நசையுறு மனத்தவர் நமனிட ரின்றியே
மிசையுறு மரன்பத மேவி வாழ்வரே.

புகழ்பெற்ற அகத்தீசர்க்கு எத்திசையிலும் உள்ள எல்லாத் தலங்களிலும் பணி செய்து வாழும் பக்தர் யமனால் வரும் துன்பமின்றிச் சிவன்பதம் பொருந்தி வாழ்வர்.

நசை – அன்பு. நமன் – எமன். மிசை – மேல்.

Those who render service in devotion deep
To the famed **Akattīcar**
At all his shrines in directions all,
Will never have torment any from **Yaman**
They will live for ever in peace
Under the aegis of **Aran's** feet.

### 71. எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வாமுமேழ் புரவியான் மருவுதே ருடையவன்
வலியதோர் வெயிலினான் மதிமுகம் வேர்வையாற்
றாபமே ரன்னமே தாண்டுமிப் பாலைகா
தங்கடந் தாலுடன் சாருகா வதமரை
வீழுமேல் விண்ணளா வியவகத் தீசனார்
மேவுபொற் கோயிலு மேடையும் புரிசையுஞ்
சூழுமே கம்படி சோலையு மக்கினித்
தூயமா தீர்த்தநற் றுறையுமே தோன்றுமே.

ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட தேரையுடைய சூரியனின் வெப்பத்தினால் சந்திரன் போன்ற முகம் வேர்த்த அன்னம் போன்ற பெண்ணே! இப்பாலை நிலங் கடந்து ஒன்றரை காத தூரம் நடந்தால் விண்ணளாவிய அகத்தீசர் உறையும் அழகிய கோயிலும், மேடையும், மதிலும், மேகம் சூழ்ந்த சோலையும், அக்கினித் தீர்த்தத்துறையும் தோன்றும்.

உடன் போக்கின் போது தலைவன் தலைவிடம் கூறியதாக இருக்கலாம்.

புரவி – குதிரை. புரிசை – மதில். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்று சிறப்பு ஒவ்வொரு க்ஷேத்திரத்ததுக்கும் உண்டு. அகத்தியான் பள்ளித் தலத்து அகத்தீஸ்வரர் கோயிலின் தீர்த்தப் பெயர் **அக்கினி தீர்த்தம்.**

(This song is perhaps the statement of the ***Talaivan*** **to the** ***Talaivi*** during her ***Uṭanpōkku*** (elopement) with the ***Talaivan*** across a ***Pālai*** (desert) land.

Oh! sweet damsel swanlike,
Thy moonlike face doth sweat in the scording heat
Of the sun who hath a chariot[1] drawn by horses seven,
If we but cross this desert
And walk a ***Kātam***[2]
The lovely temple of Lord **Akattīcar** towering up to the skil,
The ***Mēṭai***[3] therein and the ramparts around,
Besides the cloudcovered groves
And the ***Akkini Tīrttam***[4] as well
Will all be there for us to see.

1. **chariot** – According to Hindu mythology the sungod is supposed to traverse the skies in his Chariot drawn by seven horses.
2. *Kātam* – a distance of 10 miles or 16 kilometres.
3. *Mēṭai* – a raised structure or dais in a temple
4. *Akkini Tīrttam* – The name of the holy pond near **Akattīcar** temple.

In all Hindu temples the three important components are ***Mūrtti*** (the deity), ***talam*** (the shrine) and ***Tīrttam*** (temple tank).

### 72. பனிக்காலம்

(பனிக்காலம் வந்தும் தலைவன் வரவில்லையே எனத் தலைவி ஏங்குதல்)

### கட்டளைக் கலித்துறை

மேவிக் கலச முனிபூசை செய்து விளங்கிடுமோர்
காவிற் கலந்த வகத்தீசர் வந்திடக் காண்கிலனே
பூவிற் புகுந்தொளி புட்களே நெஞ்சுகற் போலுமறை
தாவிப் பனிக்கா லமும்வர வின்னமென் றாமதமே.

பூவில் புகுந்து ஒளிந்து கொள்ளும் வண்டுகளே! அகத்தியரால் பூசை செய்யப்பட்டு விளங்கும் ஒரு சோலையில் என்னைச் சேர்ந்த அகத்தீசர், மான்கள் விளையாடும் இப்பனிக்காலம் வந்தும் இன்னும் வரக் காணேன். ஏன் தாமதம்? நெஞ்சம் கல்லோ?

**கலசமுனி** – கும்பமுனி அகத்தியர். புள் – வண்டு. மறை – மரை – மான்.

### *Pan̲ikkālam* – the dewy season

The ***Talaivi*** (heroine) longs for the company of the ***Talaivan̲*** (hero) as he has not shown up even after the advent of the dewy season)

Oh! beetles who hide yourselves in flowers
Lord **Akattīcar** who did mate with me
At a grove where saint **Akattiyar** offered worship
Has not yet been sighted
Even after the advent of the dewy season
Which makes the deer merry and playful
Why this delay? Is he so hard hearted ?

### 73. சவலை வெண்பா

மதனை யெரித்த மகிபனை வேளாஞ்
சுதனை யளித்த சுதனை
யகத்திப் பரனை யறியுந் தவரே
சகத்திற்சா வில்லா தவர்.

மன்மதனை எரித்தவனும், செவ்வேளாகிய முருகனை மகனாகப் பெற்றவனும் ஆகிய அகத்தீசுவரனை அறிந்த தவத்தையுடையரே இவ்வுலகில் சாவில்லாதவர்.

**சவலை வெண்பா** – வெண்பா இலக்கணம் பெற்று, இரண்டாம் அடி இறுதிச் சீர் குறைந்து வந்துள்ளதால் இப்பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. **மதன்** – மன்மதன். **மகிபன்** – அரசன். **வேள்** – முருகன். **சுதன்** – மகன். **சகம்** – உலகம்.

## *Cavalai Veṇpā*[1]

Only those who in penance theirs comprehend **Akattīcan**
Who did burn **Manmatan** in his ire
And who hath *Vēḷ*[2] as his son
Are the immortals veritable who defy death
In this world of ours.

1. *Cavalai Veṇpā* – This quatrain is in *Veṇpā* metre but in the secondline of the original text in Tamil the *Cīr* or metrical foot falls short and hence becomes defective or weak. Therefore it is called *Cavalai Veṇpā* . *Cavalai* means anaemic or weak.

2. *Vēḷ* – *Vēḷ* or *Cevvēḷ* means a fair and handsome person. Here it refers to Lord **Murukan**.

### 74. பிச்சியார்

(தலைவனை நினைத்துப் பைத்தியங் கொண்ட ஒரு தலைமகளின் நிலையை விளக்குதல்)

### எழுசீராசிரியச் சந்த விருத்தம்

தவவுரு வங்கொளு மக்கம் விபூதி
தரித்துடை காவி யுறச்
சிவவுரு வங்கொ டகத்திய னூருள
தெருவுறு பிச்சி யரே
நவவுரு வங்கொடு பிச்சை யெடுத்திட
நாடுநீர் பிச்சி யரோ
வவவுரு வங்கம தசைவற நோக்குறு
மாடவர் பிச்சி யரோ.

தவவேடமாகிய உருத்திராட்ச மாலை, திருநீறு ஆகியவற்றைத் தரித்து, காவியுடை உடுத்தி, சிவ உருவம் கொண்டு அகத்தியான் பள்ளியில் உள்ள தெருவில் வரும் பிச்சியாரே! புதிய உருவம் கொண்டு பிச்சை எடுத்திட வரும் நீர் பித்தரோ? ஆசை தரக்கூடிய உங்கள் அங்கத்தைக் கண் இமைக்காமல் நோக்கும் ஆடவர் பித்தரோ?

**அக்கம்** – உருத்திராட்சம். **கொடு** – கொண்டு. **நவ** – புதிய. **அவவுரு** – ஆசைதரக் கூடிய.

## *Picciyār* – (A crazy woman)

(Description of a ***Talaimakaḷ***[1] who has gone crazy with love towards her ***Talaivan̲***[2])

Oh! ***Picciyār*** who dost sport
The saintly outfit of a string of beads[3],
With sacred ash[4] and saffron robe[5] besides
And walk in he streets of **Akattiyān̲paḷḷi**
In he guise of Lord **Civan̲**
Art thou insane to project thyself
As a strange beggar thus?
Or are those men insane
Who stare at the provocative sexy features thine ?

1. ***Talaimakaḷ*** – ***Talaivi*** or heroine
2. ***Talaivan̲*** – The hero or lover.

3,4,5 – Cavite saints wear **Strings of beads, sacred ash** and **saffron robes** to identify themselves with Lord **Civan̲** as his true devotees.

The term ***Picciyār*** in this song means a crazy or insane person

## 75. சித்து

(சித்தர்கள் ஒன்றை வேறொன்றாக மாற்றுவேன் எனக் கூறுதல்)

### எண்சீ ராசிரிய விருத்தம்

பிச்சியரும் பித்தளைநா கங்காணச் செய்வோம்
பேசுமிரும் பைநாகம் பணமுமுறச் செய்வோம்
நச்சியுறு மீயத்தை வெள்ளிவரச் செய்வோம்
நாகத்தைப் பொன்னாக நாடுறவுஞ் செய்வோம்
இச்சித்த படியேயி ரசவாதஞ் செய்யு
மியலுறுமோர் பதினெட்டுச் சித்தர்களில் யானோர்
மெச்சுஞ்சீர் பெற்றதொரு சித்தன்யா னென்னூர்
விளங்குமகத் தீசர்வதி மேவுறுநற் பதியே.

பித்தளையை நாகமாகச் செய்வோம். இரும்பையும் துத்த நாகமாக்கிப் பணம் பெறுமாறு செய்வோம். ஈயத்தை வெள்ளியாக்குவோம். துத்தநாகத்தைப் பொன்னாக்குவோம். விரும்பியபடி இரசவாதம் செய்யும் 18 சித்தர்களில் நானும் ஒருவன் ; புகழ் பெற்றவன். என் ஊர் அகத்தீசர் வாழும் அகத்தியான் பள்ளி.

பிச்சியரும்புகளை ஜடை நாகத்தைச் சுற்றிப் பின்னுவோம். பெரிய நச்சுப் பையையுடைய நாகத்தைப் படம் எடுக்கச் செய்வோம் ; வானில் வெள்ளியை (சுக்கிரனை) வரச்செய்வோம். மலையைப் பொன்னாகச் செய்வோம் (மேருமலை) என்று இயல்பாக உள்ளதை அப்படியே கூறும் சாதாரணப் பொருளும் காண்க.

**இரும்பு** + **ஐ** = இரும்பை. **இரும்** + **பை** = பெரியபை. **நாகம்** – மலை, பாம்பு. **பணம்** – படம் ; காசு.

## *Cittu*[1] (The magic of the mystics)

(Declaration of the alchemy of ***Cittars***)

We the ***Cittar***[2]
Will convert brass into zinc
And change iron too similarly as zinc
To make money thereby

Lead lowly we will transform into silver sparkling
We will make gold out of zinc for sure,
I am one of the *Cittar* **eighteen**[2]
Who perform alchemy such as we desire
Famous am I as a ***Cittar***
And I belong to **Akattiyāṉpaḷḷi**
Where **Akattīcar** doth reside.

1. *Cittu* - magical trics or miracles performed by Cittar.

2. *Cittar* - a mystic or unorthodox saint

3. ***Cittar eighteen*** - There were eighteen **Cittar** who were mystics. They not only performed magical feats or miracles but also evolved an efficient system of medicine known as **Siddha medicine**. They were experts on both temporal and spiritual matters.

**76. கட்டளைக் கலித்துறை**

பதிவி லமணர்க்கு நாசவா திக்கும் பவுத்தருக்கு
மதியில் வயிணவ மாந்தர்க்கும் யார்க்கு மதியுரைப்பேன்
நிதியுறு மாதி யுயிரெலாந் தந்த நிமலனருங்
கதிதரு வோனகத் தீசன வன்றாட் கருதுமினே.

நல்ல கொள்கையற்ற சமணர்க்கும், தீய வாதம் செய்பவர்க்கும், பவுத்தருக்கும் அறிவற்ற வைணவர்க்கும் அறிவுரை கூறுவேன்; கேளுங்கள்! செல்வம் பெற்ற உயிர்களைப் படைத்த குற்றமற்றவனும், மேலான செல்வமாகிய முத்தியைத் தருபவனும் ஆகிய அகத்தீசன் தாளை நினையுங்கள்.

பதிவு - கொள்கை. மதி - அறிவு. நிதி - செல்வம். **கதி** - மோட்சம்.

A piece of advice I do offer
To the *Camaṇar*[1] sans principles sound
And to the **nihilists**[2] who counsel evil
Besides the **Buddhists**[3] and **Vaiṣṇavites**[4] senseless

And others as well,
Do listen to me,
Contemplate in minds thine
The lord flawless who did create
The prosperous lives all here on earth
And who doth confer
The noble wealth of *Mukti*[5] eternal
Think of **Akattīcan̲**, the Lord such.

*Camaṇar* – The followers of **Jainism**

**Nihilists** – Those who consider nothing as important or valid. They also advocate destruction of existing institutions and values.

**Buddists** – The followers of **Buddhism** and the teachings of **Lord Buddha.**

**Vaiṣṇavites** – The followers or worshippers of **Lord Viṣṇu and Vaiṣṇavism.**

*Mukti* – State of eternal bliss after one's death.

### 77. வலைச்சியார்

(மீனவப் பெண்ணைப் பார்த்துக் காமுற்று உரைப்பது)

### பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்

மின்னற் போலிடை தான்றி ருக்கை
மீனைப் போலவு மேகயன்
மீனைப் போலவு மோடி டுஞ்சேன்
மீனைப் போலவு மேவிழி
சன்னற் போல்விரல் தான்கெ ளிற்றின்
சாயற் போலுற வேழுழந்
தாளைப் போலும் வராலு மாலா
தானு மலங்கு சுறாவுமுன்
பின்னற் போலெழி லேவு றச்சீர்
பெற்று மகத்திய மாநகர்

பேர்பெறு வீதியின் மீன்வி லைதான்
பேசிடு மோர்விலை மாதரே
யின்னற் செய்மத னம்பி னாலிங்
கென்னை மயற்கொள வைப்பதா
லென்ன பயன்பெறு வீர்த விர்த்தே
யின்புற வேசெய் தேகுவீரே.

மின்னல் போன்ற இடை திருக்கை மீனைப் போலுள்ளது. விழி கயல் மீனைப் போலவும் சேல் மீனைப் போலவும் பிறழுகிறது. சன்னல் போன்ற விரல்கள் கெளுத்தி மீனைப்போல் உள்ளன. முழங்கால் வரால் மீன் போன்றும் ஆலா போன்றும் உள்ளது. மலங்கும், சுறாவும் உன் பின்னல் போல் எழில் பெற்று உலாவுகின்றன. இப்படிப்பட்ட அழகுடன், அகத்தி மாநகரின் பெயர் பெற்ற வீதிகளில், மீனை விலை பேசும் மாதரே! துன்பம் தரும் மன்மதன் அம்பினால் நான் மையல் கொண்டு தவிக்கிறேன். ஆதனால் உமக்கு என்ன பயன் விளையப் போகிறது. எனவே என் துன்பம் நீக்கி இன்புறச் செய்து செல்வீராக!.

*Valaicciyar*

(Declaration of amorous desire for a lasses selling fish)

Oh! women who sell fish
In the famous streets of **Akattiyāṉpaḷḷi**
Your waists are like flashes of lightning
And ***tirukkai***[1] fishes as well
Eyes thine are like ***Kayal***[2] and ***Cēl***[3] both
Thy fingers resemble ***Caṉṉal***[4] and ***Keḻuthi***[5] alike
Your knees look like ***Varāl***[6] and ***Ālā***[7]
The plaited tresses thine move but elegantly
Like ***Mālaṅku***[8] and ***cuṟā***[9]
Oh! lovely lasses such who sell fish at **Akattinakar,**
I do suffer from pangs of love
Caused by **Maṉmataṉ's** flowery shafts

What do you gain by causing me
Amorous misery such?
Please relieve me of agony mine
And make me happy before you leave.

1 to 9. *Tirukkai, Kayal, cēl, Cannal, Keluthi, Varāl, Ālā, Mālanku* and ***curā*** are all the names of various kinds of edible fishes

### 78. நேரிசை வெண்பா

வியன்மா வகத்தி விமலனைப் பூவா
முயன்மா தவனறி யானை – யியன்மா
மறைமுடிவோ னைப்பணியு மாதவத்தோர்க் கில்லை
யிறைமுடிவோ னாற்செ யிடர்.

இடமகன்ற சிறப்புப் பொருந்திய அகத்திமாநகர் வாழும் குற்றமற்றவரும், தாமரைப்பூவில் வாழும் பிரமனாலும், திருமாலாலும் அறியப்படாதவரும் வேத முடிவாய் விளங்குபவருமாகிய அகத்தீசரை வணங்குபவருக்கு எமனால் வரும் துன்பமில்லை.

**வியன்** – அகன்ற, சிறந்த. **விமலன்** – குற்றமற்றவன். **இறை முடிவோன்** – எமன்.

For those who worship
The Lord flawlers who doth reside
At **Akattinakar** glorious of understreets,
And whom the lotusborne **Piraman**[1] and **Mātavan**[2]
Could not trace and comprehend,
And who is the substance ultimate of scriptures all,
Those who worship **Akattīcar** such,
Will have no torment from the terminal **god of death**[3]

1. **Piraman** – The god of creation in Hinduism.
2. Mātavan – **Tirumāl** or Lord **Vi** ṣṇu the god of protection.
3. god of death – **Yaman**.

### 79. கட்டளைக் கலித்துறை

இடரே யகத்தி யிறையி னருள்பெற் றிருக்குமெனைச்
சடரே செயநினை வாயதுன் மூடத் தனமலவோ
படரே லெனையிப் பொழுதுசொன் னேன்கேள் படரிலென்சொற்
சுடரே யுனது தருக்கழி வுற்றிடச் சுட்டிடுமே.

துன்பமே! அகத்தீசர் அருள்பெற்ற என்னைத் துன்புறுத்த நினைக்கிறாய். அது உன் அறியாமை. என்மீது படராதே! படர்ந்தால் என் சொல் உன் செருக்கு அழிய உன்னைச் சுடும்.

சடர் செய்தல் – துன்புறுத்துதல்.

Oh! misery,
Thou don't plan to torment me
The recipient of **Akattīcar**'s grace divine,
It is but thy ignorance
I tell thee now not to cling to me,
If thou creep over me even then
Just a word from me
Will scorch thee and arrogance thine.

### 80. இரங்கல்
### கலிவிருத்தம்

(ஒரு பெண் அகத்தீசர் மேல் காதலுற்று இரங்கிப் பாடுவதுபோல் பாடப்பட்ட பாடல்)

சுட்டிடுங் காமனார் தொட்டிழுத் தேசரம்
விட்டிடும் புண்களின் மேலையே சந்தனங்
கொட்டிடுங் கோதையீர் கோவகத் தீசருக்
கெட்டிடும் வண்ணமென் னின்னலைச் சொல்வீரே.

மன்மதன் இழுத்து விடும் அம்பினால் ஏற்பட்ட புண்களின் மேல் சந்தனம் பூசும் பெண்களே! தலைவராகிய அகத்தீசர் காதில் கேட்கும் வண்ணம் என் துன்பத்தைச் சொல்வீராக.

காமன் – மன்மதன். சரம் – அம்பு. கோ – தலைவன். **இன்னல்** – துன்பம்.

### *Irankal* (Pity)

(Expression of selfpity by a woman enamoured of **Akttīcar)**

Oh! lasses who pour sandal paste on my wounds
Caused by the heady shafts from the bowstring
Pulled by the hot **Manmatan** who hunts me
Do tell Lord **Akattīcar** in terms loud and clear
My agony of love acute
So that it reaches his ears.

### 81. கொற்றியார்

(வைணவ பக்தியுடன் வீதியில் வரும் பெண் மீது காமுற்ற ஒருவன் பாடுவது)

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

சொல்லிசை யுறுந்தமிழ் தொழப்பெறு மகத்தீ
சுரர்மருவு மூர்மறுகு தோறுமொரு நாம
நல்லிசை விளங்கிடமு நான்குமுடன் மேவ
நாடுமரி நாமமவை நாவதுரை செய்ய
வல்லிசை பெறுந்துளவ மாலையணி வுற்று
மகிழ்கொற்றி யாரென வருந்தெரிய லேவு
னெல்லிசை யுறுந்திருவி லிருடியர் தவங்க
ளிழப்பரெனி லென்மய லிசைக்குமள வுளதோ ?

சொற்சிறப்புடைய தமிழால் தொழப்பெறும் அகத்தீசர் வாழும் ஊரில் தெருத்தோறும் பெயரும் புகழும் விளங்கிட அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் நான்கு குணங்களும் பொருந்த, நாராயணா என்னும் பெயரை உச்சரித்துக் கொண்டு துளசி மாலையணிந்து கொண்டு வரும் கொற்றியாரே! உங்களுடைய அழகில் முனிவரே மயங்கித் தம் தவத்தை இழப்பர் எனின் என் காமம் சொல்ல முடியுமோ?

**மருவும்** – பொருந்திய. **மறுகு** – தெரு. **நாமம்** – பெயர். **இசை** – புகழ். **துளவமாலை** – துளசி மாலை. **முன்னான்கு** – அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு **இருடி** – ரிஷி, முனிவர். **தெரியல்** – மாலை. **மயல்** – மயக்கம், காமம். **இசைக்கும்** – சொல்லும்.

### *Korriyār* (FeMāle devotees of Lord Vi ṣṇu)

(Sung by a man enamoured of a *Korriyār*)

Oh! ***Korriyār*** ,
Who dost walk the streets of the shrine of **Akattīcar**
Worshipped by **Tamil** with its wealth of words proper,
And who endowed with the essential traits four womanly[1]
Dost wear ***Tuḷaci***[2] garland and chant the name of **Ari**[3] as well,
On seeing your beauty so ravishing
Even saints most devont will deviate from penance theirs
And lose its benefits thereof
If saints become so enamoured
Can I express adequately my lustful desire for thee?

1. The four essential traits for women are ***Accam*** (fear), ***Maṭam*** (innocence), ***nāṇam*** (shyness) and ***Payirpu.***
2. ***Tuḷaci*** – **basil** – a plant used in worship of **Viṣṇu**
3. **Ari** – An appellation of Lord **Vi ṣṇu.**

#### 82. நேரிசை வெண்பா

உளமாரப் பொய்யே யுரையார்மற் றோர்பெற்
றுளமாதைத் தாயாயெண் ணுற்றோ – ருளமா
ரகத்தீசர் தாள்போற்று மன்பருமே யிந்தச்
சகத்தே யுயருத் தமர்.

அகத்தீசர் தாள் போற்றும் அன்பர், மனம் பொருந்திப் பொய் சொல்லாதவர், மற்ற பெண்களைத் தாயாக மதிப்பவர், ஆகியோர் இப்பூமியில் உயர்ந்தவர் ஆவர்.

